உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கருவூர் அருள்மிகு கல்யாண பசுபதீசுவர சுவாமி திருக்கோயில்




# தல வரலாறு

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு அலங்காரவல்லி, சௌந்தரநாயகி உடனாகிய கல்யாண பசுபதீசுவர சுவாமி திருக்கோயில், கருவூர்.

தொலைபேசி எண். 262010

# கருவூர்த் தலவரலாறு

தொகுத்தவர்: திருமதி. இரா. சியாமளா எம்.ஏ.,பி.எட்., தமிழ் புலவர்



எல்லாம் வல்ல பசுபதிப் பெருமானின் திருவருள் துணையால் இத்தலவரலாறு வெளிவருவது குறித்து பெருமகிழ்ச்சியுடன் இன்னும் பல நற்பணிகள் செய்திட இறையருள் வேண்டுகிறோம்.

திரு. தெ. கார்த்திகேயன்
செயல் அலுவலர்

திரு. சாரதி கே. சுப்ரமண்யம் தலைவர்
அறங்காவலர் குழு.

திரு. மேலை ப. பழனியப்பன், அறங்காவலர்

திரு. கே. எஸ். சதீஸ்குமார், அறங்காவலர்

திருமதி. பி. கே. எஸ். ஜெயா அறங்காவலர்

திரு. வி. எம். செந்தில்குமார், அறங்காவலர்



நூல் வெளிவர உதவிய அன்பர்கள் :

திரு. **மொ.செல்லப்பன்** அவர்கள்
55, ராமானுஜம் நகர், கரூர்.

திரு. **கா. ராமசாமி** அவர்கள்
55-A, ராமானுஜம் நகர், கரூர்.



## நூல் விபரம்

| | | |
|---|---|---|
| 1. | நூல் தலைப்பு | : அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயில் வரலாறு |
| 2. | ஆசிரியர் | : திருமதி இரா. சியாமளா முருகானந்தம் எம்.ஏ.,பி.எட்., தமிழ் புலவர் அ/மி. கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயில் கரூர். |
| 3. | உதவிய நூல்கள் | : புலவர் திரு. அ. கணபதி ஐயா எழுதிய குடமுழுக்கு விழா மலர் 1974- லிருந்து ஆதாரமாகக் கொண்டு |
| 4. | பதிப்பு ஆண்டு | : 2001, 2006 & 2009 |
| 5. | பதிப்பு விவரம் | : மூன்றாம் பதிப்பு |
| 6. | உரிமை | : அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயில், கரூர். |
| 7. | பக்கம் | : 60 |
| 8. | நூலின் விலை | : ரூ. 15/- |
| 9. | பொருள் | : வரலாறு |
| 10. | படிகள் | : 5000 |
| 11. | வெளியிட்டோர் | : செயல் அலுவலர், அ/மி. கல்யாண பசுதீசுவரர் திருக்கோயில், கரூர். |
| 12. | நூல் கிடைக்குமிடம் | : செயல் அலுவலர், அ/மி. கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயில், கரூர். |

**அ/மி. கல்யாண பசுபதீசுவரர் சுவாமி திருக்கோயில்**
**கரூர் நகர்.**

## நிர்வாகம் - தமிழக அரசு - 2009

மாண்புமிகு டாக்டர். **கலைஞர் மு. கருணாநிதி** அவர்கள்
தமிழக முதலமைச்சர்

மாண்புமிகு **K. R. பெரிய கருப்பன்** அவர்கள்
இந்து சமயஅறநிலைய ஆட்சித்துறை அமைச்சர்

உயர்திரு. **க. முத்துசாமி** இ.ஆ.ப. அவர்கள்
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

உயர்திரு. **P. R. சம்பத்** இ.ஆ.ப. அவர்கள்
சிறப்பு ஆணையர் (ம) ஆணையர். இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

உயர்திரு. **M. K. பாலசுப்ரமணியன்** பி.ஏ.பி.எல்., அவர்கள்
இணைஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, திருச்சிராப்பள்ளி.

உயர்திரு. **S. கணேசன்** பி.ஏ., அவர்கள்
உதவி ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
கரூர். (கூடுதல் பொறுப்பு)

திரு. **தெ. கார்த்திகேயன்**
செயல் அலுவலர்

திரு. **சாரதி கே. சுப்ரமணியம்** தலைவர்
அறங்காவலர் குழு.

திரு. **மேலை ப. பழனியப்பன்,** அறங்காவலர்

திரு. **கே. எஸ். சதீஸ்குமார்,** அறங்காவலர்

திருமதி. **பி. கே. எஸ். ஜெயா** அறங்காவலர்

திரு. **வி. எம். செந்தில்குமார்,** அறங்காவலர்

**M. K. பாலசுப்ரமணியன்** பி.ஏ.பி.எல்.,
**இணை ஆணையர்**
**இ.ச.அ. ஆட்சித்துறை**
**திருவரங்கம், திருச்சிராப்பள்ளி.**

# அணிந்துரை

வரலாற்றுச் சிறப்பும், ஆன்மீகச் சிறப்பும் கொண்ட இக்கருவூர் பண்டைய காலத்தில் வணிக நகரமாகவும், தொழில் நகரமாகவும் விளங்கிய சிறப்பிற்குரியது. மேலும், முடியுடைய மூவேந்தர்களான சேரர், சோழர், பாண்டியர் ஆட்சி நடத்திய சிறப்பிற்குரியது.

இப்புகழ்மிகு கருவூரின் நடுநாயகமாகத் திகழ்வதுதான் அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் சுவாமி திருக்கோயில். இத்திருக்கோயிலின் அனைத்துச் செய்திகளையும் யாவரும் புரிந்துகொள்ளும் வகையில் இனிய, எளிய தமிழில் திருமதி. இரா. சியாமளா முருகானந்தம் தமிழ் புலவரால் எழுதப்பட்டுள்ள இத்தலவரலாற்றில் புராணச் செய்திகள் மட்டுமல்லாமல் பண்டையகால வரலாற்றுச் சிறப்புக்களும் அதனை தெளிவாக விளக்க ஆவண ஆதாரங்களுடனும் மிக அருமையாக எழுதியுள்ளார். ஆலய பழைய ஸ்தல புராணம் மற்றும் சரித்திர ஆசிரியர்களும் மற்றும் வரலாற்று வல்லுனர்களும் சிறப்பாக குறிப்பிட்டுள்ள செய்திகளையும் தொகுத்து கொடுத்துள்ளார். ஆலயத்தின் சிறப்புகளையும் மாண்பினையும் மிகவும் அழகாக எழுதியுள்ள இந்நூல் படிப்பவர்களுக்கும், பக்த நெஞ்சங்களுக்கும் பயனுடையதாக அமைந்திட வாழ்த்துகிறேன்.

**சாரதி கே. சுப்ரமணியன்**
அறங்காவலர் குழுத் தலைவர்
அ/மி. கல்யாண பசுபதீசுவரர் சுவாமி திருக்கோயில்,
கரூர்.

## அணிந்துரை

கொங்கு ஏழ் தலங்களில் தலையாயதும், சுயம்பு மூர்த்தியாகவும் எழுந்தருளியுள்ள அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயில், திருஞான சம்பந்தரால் பாடல் பெற்றத் தலமாகும்.

பண்டைய மன்னர்களின் தலைநகரமாகவும், மிகப் பழங்காலந்தொட்டு மேல்நாடுகளுடன் வியாபாரத் தொடர்பு கொண்ட இவ்வூர் மிகவும் வரலாற்றுச் சிறப்புமிக்கதாகும்.

நூலாசிரியர் இச்சிறு நூலில் இத்திருக்கோயில் கந்த புராண காலத்தில் வாழ்ந்த முசுகுந்த சக்கரவர்த்தியால் திருப்பணி செய்யப்பெற்றது, அமராவதி நதியால் தீர்த்தச் சிறப்பு பெற்று விளங்குவது, பதினெட்டுச் சித்தர்களில் ஒருவரான கருவூர்த் தேவர் வாழ்ந்து திருவருள் பேறடைந்து கோவில் கொண்டு விளங்குவது, சிவகாமியாண்டார், எறிபத்த நாயனார், புகழ்ச்சோழ நாயனார் வாழ்ந்து திருவருள் பேறடைந்தது என கருவூரின் வரலாற்றுச் சிறப்பையும், அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் திருக்கோயிலின் பல்வேறு ஆன்மீகச் சிறப்பையும் மிகவும் நல்ல முறையில் இவ்வாலயத்தில் பணியாற்றும் புலவர் திருமதி இரா.சியமாளா அவர்கள் இவ்வரலாற்று நூலை இயற்றியுள்ளார்.

அன்பர்கள் இவ்வரலாற்று நூலை வாங்கிப் படித்து பசுபதிப் பெருமானின் அருள் பெற்றுய்ய வேண்டுமாய் வேண்டுகிறேன்.

இந்நூல் வெளிவர உதவிய அன்பர்களுக்கு எனது நன்றியைத் தெரிவிப்பதுடன், பசுபதிப் பெருமானின் பெருங்கருணையினால் எல்லா நலன்களையும் பெற்றுய்ய வேண்டுகிறேன்.

வரலாற்று வித்தகம், களஞ்சியச் செம்மல்,
பேராசிரியர். ம. இராசசேகர தங்கமணி,
வரலாற்றுத்துறைத் தலைவர், அரசு கலைக்கல்லூரி, கரூர் (ஓய்வு)

# அணிந்துரை

பண்டைத் தமிழகத்தின் தலைசிறந்த நகரங்களுள் கருவூரும் ஒன்று. இந்நகரம் ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டு கால வரலாற்றுப் புகழ் பெற்றது. இது சேரர்களின் கோநகராகத் திகழ்ந்த பெருமைக்குரியது. இக்கோ நகர் வஞ்சி எனவும் அழைக்கப்பெற்றது. வரலாற்றுப் பெருமையுடன் ஆன்மீகச் சிறப்பும் கொண்ட இம்மாநகர் முன்பே சிறந்த வணிக நகராகவும் தொழில் நகராகவும் விளங்கிற்று. சேரர் வஞ்சியாகத் திகழ்ந்த இப்பெருநகரம் ஆதிபுரம், கர்ப்பபுரி, வஞ்சி, வஞ்சித்தாய் ஊர், முடிவழங்கு சோழபுரம் முதலான பெயர்களால் இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் குறிக்கப் பெறுகின்றது. வஞ்சியம்மன் கோயில் கருவூரின் பழம் பெருமையை வெளிப்படுத்துகின்றது.

இப்புகழ்மிகு கருவூரின் நடுநாயமாகத் திகழ்வது ஆனிலையப்பர் திருக்கோயில். இத்திருக்கோயில் அருள்மிகு பசுபதீஸ்வரர் திருக்கோயில் எனவும் அழைக்கப் பெறுகின்றது. இத்திருக்கோயிலுக்கு நல்லதோர் தலவரலாறு இல்லையே எனும் குறையைத் தீர்க்கும் வகையில் உங்கள் கைகளில் தவழ்வது தான் புலவர் திருமதி. இரா. சியமளா முருகானந்தம் அவர்களால் எழுதப்பட்ட இத்தல வரலாறு.

நூலாசிரியர் இச்சிறு நூலில் ஆனிலையப்பர் திருக்கோயில் புராணச்சிறப்பு, மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றின் சிறப்பு, அலங்காரவல்லி, வடிவுடைய நாயகி ஆகிய அம்மன்களின் பெருமை, திருக்கோயிலின் அமைப்பு, இத்திருத்தலத்தில் வணங்கி நற்பேறு பெற்ற புனிதர்கள், பிரமன் சாபத்தினின்றும் விடுபட்ட நிகழ்ச்சி, எறிபத்தர், சிவகாமியாண்டார், புகழ்ச்சோழர் ஆகியோரின் சிறப்பு, கருவூரில்அமைந்துள்ள புனித நீர் நிலைகளில் நீராடுவதால் ஏற்படும் பலன்கள், கல்வெட்டுகளிலும், சங்க இலக்கியங்களிலும் குறிக்கப் பெறும் கருவூரின் சிறப்பு, கருவூர்ச் சித்தரின் வாழ்வும் பெருமையும் இத்திருத்தலத்தின் கண் சிறப்பாகக் கொண்டாடப்படும் திருவிழாக்கள், நிகழ்த்தப் பெறும் வழிபாடுகள், திருப்பணிகள், திருக்கோயில் நிர்வாகம், இத்திருக்கோயில் தொடர்பான இலக்கியங்கள் முதலான அனைத்துச் செய்திகளையும் யாவரும் புரிந்து கொள்ளும் வகையில் இனிய, எளிய தமிழில் எழுதியுள்ளார். இவரது மொழி நடையில் இவரது தமிழ்ப்புலமை நன்கு வெளிப்படுகின்றது.

கருவூருக்கு வழங்கப்படும் பல்வேறு பெயர்களையும், அவ்வாறு அழைக்கப்படுவதற்கான காரணங்களையும் இவர் நன்கு விவரிக்கிறார்.

திருக்கோயிலின் அமைப்பு, கோபுரங்கள், தெய்வத் திருவுருவங்கள், மண்டபங்கள், திருச்சுற்றுகள், மூலவர், கருவறையைச் சுற்றிலும் சூழ்ந்தும் எழுந்தருளுவிக்கப் பெற்றுள்ள தெய்வத் திருவுருவங்கள் பற்றியும் நூலாசிரியர் விவரித்துள்ளமை உயிரோட்டமாக உள்ளன.

ஆ- நிலை என்பதற்கு 'ஆன்மாக்கள் நிலை கொள்ளும் இடம் என்றும் கூறலாம்' என்று ஆசிரியர் விளக்கமளித்துள்ளமை பாராட்டுக்குரியது. கருவூர்த் திருக்கோயிலின் கண் பக்தர்கள் பின்பற்ற வேண்டிய நியம முறைகளையும் விளக்கியுள்ள பாங்கு இறையன்பர்களின் உள்ளங்களைத் தூண்டுவதாக உள்ளன. கருவூர்த் திருத்தலத்து புனித நீர்நிலைகளில் (தீர்த்தங்களில்) குறிப்பாகஅதிலும் சிறப்பாக பிரம்ம தீர்த்தத்தில் கார்த்திகை திங்கள் கார்த்திகை நாளில் நீராடித் திருவிளக்கேற்ற சிவ பதவி கிடைக்கும் என்றும், மன்னன் கோபிதாரன் பாவத்தினின்றும் விடுதலை பெற்ற நிகழ்ச்சியும் சிறப்பாக எழுதப்பட்டுள்ளன.

கருவூரின் கல்வெட்டுப் பெருமைகளை விளக்க வந்த நூலாசிரியர், கருவூருக்கு வடக்கே 12 கி.மீ. தொலைவில் உள்ள புகழூர் ஆறுநாட்டார்மலையில் உள்ள சேரர் குடிவழியைக் கூறும் கல்வெட்டுகளில் விளக்கத்தை வரலாற்றுக் கண் கொண்டு ஆய்ந்துள்ளமை பாராட்டத்தக்கது.

கருவூரைப் பல காலங்களில் ஆண்டு வந்த பல்வேறு அரசக்குடியைச் சேர்ந்த மன்னர்களுக்கும் ஆனிலையப்பர் திருக்கோயிலுக்கும் நிலவிய தொடர்பை விளக்கும் கல்வெட்டுக்களை இந்நூலாசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார். மூன்றாம் குலோத்துங்க சோழன் கருவூருக்கு 'முடிவழங்கு சோழபுரம்' என பெயரிட்டதன் சூழல் யாது? என்பது பற்றியும் தெரிவிக்கிறார்.

நூலாசிரியர் இந்நூலின் இறுதியில் பக்திச் சிறப்புடன் ஆன்மீகப் பெருமையையும் உணர்த்தும் 28 பாடல்களை இணைத்துள்ளார். இவற்றை அனைத்து இறையன்பர்களும் மனப்பாடம் செய்தல் வேண்டும்.

கருவூரின் வரலாற்றுச் சிறப்பையும், அருள்மிகு கல்யாண ஆனிலையப்பர் திருக்கோயிலின் பல்வேறு ஆன்மீகச் சிறப்பையும் பொதுமக்களுக்கு உணர்த்தும் வகையில் இந்நூலைத் திறம்படி இயற்றியுள்ள நூலாசிரியை திருமதி. இரா. சியாமளா அவர்களையும், இந்நூலை வெளியிட்டுள்ள தமிழ்நாடு இந்து சமய அறநிலைய துறையினர்க்கும் இதுபோன்ற திருக்கோயில்களின் தல வரலாறுகள் வெளிவர வேண்டுமென்பதில் பேரார்வம் கொண்டுள்ள தமிழக அரசையும் பாரட்டுகிறேன்.

இந்நூலை அனைவரும் படித்து, உணர்ந்து அருள்மிகு கல்யாண பசுபதீசுவரரின் அருள் பெற்றுய்ய வேண்டுமாய் வேண்டுகிறேன்.

## ஆனிலை சிறு தகவல்கள்

இறைவன் பெயர் : அருள்மிகு கல்யாண பசுபதீசுவரர் (எனும்) ஆனிலையப்பர்

இறைவிகள்பெயர் : கிருபாநாயகி எனும் அலங்காரவல்லி வடிவுடையாள் எனும் சௌந்தர்யநாயகி

அமைவிடம் : கருவூர், கரூர் மாவட்டம்.

தல மரம் : வஞ்சி (அசோகம்)

தல தீர்த்தங்கள் : அமராவதி, பிரம்மதீர்த்தம், தாடகை தீர்த்தம், அரசதீர்த்தம், தேனுதீர்த்தம், முருகதீர்த்தம்.

கோவில் கட்டிய-காலம் : ஆதியில் பிரம்மன் கல்வெட்டு ரீதியாய் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.

வழிபட்டோர் : விநாயகர், முருகன், நவகிரகங்கள்,எண்திசை பாலகர்கள், சுக்ரன், அலைமகள், மலைமகள், பிரம்மா, திருமால், காமதேனு, சூரியன், அகத்தியர், கோபிதாரன், வியாசர்,முசுகுந்தன், புகழ்ச்சோழர், எறிபத்தர், அருணகிரிநாதர், கருவூரார், திருஞானசம்பந்தர்.

நாயன்மார்கள் : திருஞானசம்பந்தர், புகழ்ச்சோழர், எறிபத்தர்
(இத்தல தொடர்புடையோர்)

பாடல் பாடியவர்கள் : திருஞானசம்பந்தர் -- தேவாரம்
கருவூரார் - - திருவிசைப்பா
அருணகிரிநாதர் - - திருப்புகழ்

வழிபாட்டு காலங்கள் :- ஆறு காலங்கள்
(உஷத்காலம் துவங்கி பள்ளியறை)

(திறந்திருக்கும் நேரம் - காலை 6.00-- 12.30
மாலை 4.00 - 8.45
(உற்சவ நாட்கள் மாறுதலுக்குட்பட்டவை)

## பொருளடக்கம்

1. கருவூர்த் தல அறிமுகம்
2. தலச் சிறப்பு
3. மூர்த்திச் சிறப்பு
4. அம்மன் சிறப்பு - அலங்காரவல்லி அம்மன் - சௌந்தர்ய நாயகி அம்மன்
5. சண்முகர்
6. வராககிரி
7. பிரம்மதேவர் சாப நீக்கமும், காமதேனு வழிபட்டதும்
8. எறிபத்தர்,- சிவகாமியாண்டார்,- புகழ்ச்சோழர் - முசுகுந்தன்
9. பதரி வனமும், வியாச முனிவரும்
10. எண் திசை பாலகர்க்கு அருளியது
11. அசுரகுரு சுக்கிரனும், மிருதசஞ்சீவினியும்
12. கோபிதாரத்வஜனும் அகத்திய மாமுனியும்
13. கொடியோன் விபண்டகன் சிவகணத் தலைவனானது.
14. நியம முறைகள்
15. கருவூர் தலத்துள் தானங்களின் பலன்
16. தல தீர்த்தங்களும், நீராடும் பலனும்
17. கல்வெட்டுக்களிலும், சங்க இலக்கியங்களிலும் கருவூர்
18. கருவூர் சித்தர்
19. திருவிழாக்கள்
20. வழிபாடுகள்
21. திருப்பணி
22. நிர்வாகம்
23. பாடல்கள்

## பிரம்மதேவர் சிவனைத் துதித்தருளியது

உருவே அருவே ஒளியே சரணம்
உணர்வே! உணர்வார் உணர்வே சரணம்.
குருவாய் வெளியே வருவாய் சரணம்
கொடுமால் விடமார் மிடறா சரணம்
கருமாகரிவீழ் உரியாய் சரணம்
கருவேர் அறவே வருவாய் சரணம்!
திருமால் அறியா இறையே சரணம்
திரு ஆ நிலையாய் சரணம்! சரணம்!



கைலை - மந்திரம் - காசி - காஞ்சி - பிரயாகை - நைமிசாரண்யம் - சேது - வஞ்சுளாரண்யம் எனும் சிவத்தலங்கள் மிகச்சிறந்தன. வஞ்சுளாரண்யம் எனும் கருவையில் ஒன்பது நாள் வழிபட்டு பூசித்தோர் மற்ற ஏழு எட்டுத் தலங்களையும் வழிபட்டபலன் அடைவர்.

(இது சூதக முனிவர் நைமிசாரண்ய முனிவர்களுக்குச் சொன்னது. அத்தகையப் புகழ்பெற்ற சிவத்தலமான கருவூர் பற்றிக் கூறுவதே இந்நூலின் சிறப்பாகும்.)

# கருவூர் தல - அறிமுகம்

சப்தமம் எனும் சமக்கிருதச் சொல்லானது இந்து மதத்தில் ஒரு முக்கிய இடம் வகிக்கின்றது. சப்த ஸ்வரங்கள், சப்த மாதர்கள் என்பது போல் சப்த ஸ்வரங்கள் என்பதும் முக்கியத்துவம் உடையது. இதனால்தான் கோபுரங்கள் பெரும்பாலும் ஏழுநிலைகளைக் கொண்டவையாகக் கட்டப்பட்டு வந்தன. (சப்தமம் என்பது தமிழில் ஏழு எனும் எண்ணிக்கையைக் குறிப்பதாகும்)

கொங்கேழு சிவத்தலங்களாகிய ஆதி கருவூர், வெஞ்சமாங்கூடலூர், திருமுருகன் பூண்டி, அவினாசி, திருச்செங்கோடு, பவானி, திருப்பாண்டிக்கொடுமுடி என்பவற்றுள் முதன்மையானதாக உள்ளது ஆதி கருவூர் எனப்படும் இத்திருத்தலமாகும்.

ஆதி கருவூர் என இத்தலம் அழைக்கப்படுவதன் காரணம் - உலகம் தோன்றும்போது முதன் முதலாகத் தோன்றிய ஊர் என்பதாகவும், பிரம்மன் தனது படைப்புத் தொழிலை முதன் முதலாகத் தொடங்கிய இடம் என்பதாகவும் கொள்ளலாம்.

வேதங்களின் வடிவாகவுள்ள சிவபெருமான் பக்தர்களின் எண்ணங்களை உணர்ந்து அதற்கேற்ப அருள்தரும் வடிவ மூர்த்தமே தென்முகக்கடவுள். தென்முகக் கடவுளின் சந்நிதியின் முன்பு மௌனமாகத் தியானித்திருக்கும்போது கேள்விகளின் விடை யாவும் நமக்குள்ளேயே கிடைக்கும்.

இதனால்தான் சனக, சனகாதி முனிவர்கள் சூழ்ந்திருக்க கல்லால மரத்தின் கீழிருந்து யோகநிலையில் வேதங்களின் உட்பொருளை அவர்களுக்கு மௌனத்தால் உணர்த்தினார். முதலில் சனத் குமாரருக்கும், சனத் குமாரரிடம் இருந்து வேத வியாசருக்கும், வேதவியாசரிடமிருந்து சூத புராணிகளுக்கும் தெளிவுபடுத்தப்பட்டன. அவையே பதினெண் புராணங்கள் ஆகும்.

பதினெண் புராணங்களுள் ஒன்று பிரமகை விருத்தம். அது பல காண்டங்களை உள்ளடக்கியுள்ளது. சிவக்ஷேத்ர காண்டமெனும் பிரிவில் நூற்று ஒன்பதாவது அத்தியாத்தில் ஆனிலையப்பர் குடி கொண்டுள்ள இக்கருவூர்த் தலச்சிறப்பானது கூறப்படுகின்றது.

இக்கருவூர் என்னும் ஆதியில் வஞ்சிமா நகர் என்றழைக்கப்பட்டதாகக் கூறப்படுகின்றது. சேரர்களின் தலைநகரமான வஞ்சியே'கருவூர் - கருவூரே வஞ்சி என்பது பற்றி பலர் ஆய்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளனர். மேலைக் கடற்கரையில் உள்ள கொடுங்கோளூரே வஞ்சி எனச் சிலர் கூறினாலும், இலக்கியம் மற்றும் கல்வெட்டு ஆராய்ச்சிகளின் முடிவில் கருவூர் தான் வஞ்சி என அழைக்கப்பட்டதாக முடிவு செய்யப்படுகின்றது.

சேர மன்னர்கள் ஆண்டு வந்தது, மலைவளம் உள்ள பகுதி என்பதற்கிணங்க கருவூரைச் சுற்றி மலைகள் இருப்பதையும், கருவூரில் வஞ்சியம்மன் என்ற அம்மன் ஆலயம் இருப்பதையும் வெளிப்படைச் சான்றாகக் கொள்ளலாம்.

சேரர்களும், சோழர்களும், பாண்டியர்களும் இங்கு ஆட்சி நடத்தியமை அவரவர் கால கல்வெட்டுக்களால் தெரிய வருகின்றது. மூர்த்தி - தலம் - தீர்த்தம் என்னும் மூன்று சிறப்புக்களையும் உள்ளடக்கியுள்ளதாக இத்தலம் உள்ளது.

- முதலில் தோன்றியமையால் ஆதிபுரம் எனவும்,

- பெருமாள் பள்ளி கொண்ட ஊராகையால் பாஸ்கரபுரம் எனவும்,

- சோழர்களால் வெல்லப்பட்ட காலத்தே வீரசோழபுரம் எனவும்,

- வஞ்சி மரங்கள் செறிந்திருந்தமையால் வஞ்சுளாரண்யம்எனவும்,

- மலை-காடு-ஆறு-தீர்த்தம்-நகரம்-கோவில் எனும் ஆறு மங்கலப் பொருட்கள் உடையமையால் ஷண்மங்கல க்ஷேத்ரம் எனவும்,

- ஆ (காமதேனு) வழிப்பட்டமையால் ஆனிலை எனவும்,

- முதன்முதலில் கரு உருவான (பிரம்மனது படைப்பில் முதல் உயிர்) காரணத்தால் கர்ப்பபுரி எனவும்,

- கற்பங்கள் தோறும் பசுபதிநாதன் வெளிப்பட்டு மூன்று சக்திகளை நெறிப்படுத்தியும், தோன்றிய யாவற்றையும் தன்னுள் மறைத்து மீண்டும் வெளிப்படுவதாலும், கரபுரம் எனவும் பல்வேறு பெயர்களால் வஞ்சி எனும் கருவூர் அழைக்கப்பெறுகின்றது.

இத்திருத்தலமானது முக்கிய ஊர்களின் மையமாக உள்ளது..

கிழக்கே 76 கி.மீ. தொலைவில் திருச்சிராப்பள்ளியும்,

மேற்கே 113 கி.மீ. தொலைவில் கோயம்புத்தூரும்,

வடக்கே 100 கி.மீ. தொலைவில் சேலமும்,

தெற்கே 144 கி.மீ. தொலைவில் மதுரையும் இருந்தாலும்

ஏறத்தாழ 30 கி.மீ. தூரங்களுக்குள் மேற்படி மாவட்ட எல்லைகள் துவங்கி விடுகின்றது.

மலைகள் அதிகம் உள்ளமையால் இங்கு கட்டிடம் கட்டத் தேவையான கற்கள் நல்ல தரத்துடன் கிடைப்பதால் வாணிக உற்பத்தி மையமாகவும், கைத்தறித் தொழில் சிறப்புற உள்ளமையால் உலகளவிலும் பெருமை படைத்ததாக உள்ளது.

அமராவதி ஆறு பாய்கின்றது. மேலும் மணி முத்தாறு, அமராவதி, காவிரி போன்ற மூன்று ஆறுகள் 20 கி.மீ.க்கு அப்பால் ஒன்றிணைந்து திருமுக்கூடல் என்று பெயர்படைத்ததாக உள்ளது.

தெற்கே 4 கி.மீ. தொலைவில் தாந்தோன்றிமலை எனும் திருமால் ஆலயமும், வடக்கே 15 கி.மீ. தொலைவில் ஆறுநாட்டார் மலை எனப்படும் புகழிமலையும் உள்ளது. புகழிமலையில் முருகன் அருள் தரிசனமளிக்கின்றார். இதில் தாந்தோன்றிமலை குடைவரைக் கோவிலாக உள்ளது என்பதும், புகழிமலையில் பல கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன என்பதும் குறிப்பிடத்தக்கது.

காமதேனுவால் தோற்றுவிக்கப்பட்ட தேனுதீர்த்தம் வெண்ணெய்மலையில் சுமார் 6 கி.மீ. தொலைவில் வடதிசையில் உள்ளது.

## தலச்சிறப்பு

ஆனிலையப்பர் என்று அழைக்கப்பெறும் பசுபதீசுவரர் ஆலயத்தைக் கட்டியது யார்? எனும் கேள்வியே இங்கு ஆராய்ச்சிக்குரியது.

தற்போது இருக்கும் ஆலய அமைப்பு சோழர் காலக் கட்டிடக் கலையை மையமாகக் கொண்டிருப்பினும், பல்லவர் சிற்பக்கலையின் முக்கியத்துவமான மகிஷாசுரமர்த்தினியின் சிலையும் தூண்களில் காணப்பெறுகிறது.

முசுகுந்த சக்ரவர்த்தியால் இக்கோவிலும், அபயப்பிரதான ரெங்கநாதர் கோவிலும் கட்டப்பட்டதாகக் கோவிலில் உள்ள அவரது உருவச் சிலையமைப்பு காணப்படுவதைக் காணும்போது தெரிகின்றது. ஆனால், வஞ்சிவனத்தில் பிரமதீர்த்தம் உருவாக்கி, வெண்ணெய்மலையின் வடப்புறத்தில் வேள்விச்சாலை அமைத்து, வணங்கி புற்றிடங்கொண்ட பாதாள லிங்கத்தினை வழிபட்டு கோவில் அமைத்தமையால், கோவில் முசுகுந்தனால் புதுப்பிக்கப் பட்டிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

முசுகுந்தன் முதற்காலச் சோழர் வம்சாவழியைச் சார்ந்தவராக இருக்கலாம் என்றும், திருப்பரங்குன்றத்தில் தெய்வயானையுடனான முருகப்பெருமானது திருமண வைபவத்திற்கு முசுகுந்தனுக்கு அழைப்பிதழ் வரப்பெற்றதாக புராணச் செய்திகள் உரைக்கின்றன.

மேலும் பெரியபுராணத்துள் பாடல் பெற்றதாகவும், எறிபத்த நாயனார் வாழ்ந்த தலம் என்பதாலும் கோவிலின் வரலாறு முழுமையடையவில்லை.

முதலாம் இராஜேந்திரனின் காலமாக கி.பி. (1012-54)-ல் பசுபதீசுவரர் கோவிலுக்கு நிலக்கொடை அளித்தமையால் கோவில் நிச்சயமாக ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகத் தோன்றுகிறது.

யவன ஆசிரியர் தாலமி கருவூரை உள்நாட்டுத் தலைநகர் என்று கூறி இருப்பதாலும், உரோமானியர்களுக்கும் கருவூருக்கும் வணிகத் தொடர்பு இருந்ததாலும் கோவில் 2000 ஆண்டிற்கு முற்பட்டதாக இருக்கும் என்று தெளிவாகின்றது.

புராணங்களின் அடிப்படையில் பிரம்மனால் தோற்றுவிக்கப்பட்டதாகக் கூறப்படுவதை நோக்குங்கால் இதன் தலவரலாறு அறிவிற்கெட்டாத ஒன்றாக உள்ளது.

எப்படியிருப்பினும் சேர, சோழ, பாண்டியர்களால் இக்கோவில் அடிக்கடி சீர்திருத்தப்பெற்று, தங்கள் கால கட்டிடக் கலையை சிறப்பித்திருக்கின்றனர் என்பது புலனாகின்றது.

கோவில் கிழமேல் 465 அடியும், தென்வடல் 250 அடியும் அளவாகக் கொண்டு கற்கோவிலமைப்பைச் சார்ந்தது. இதனைச் சுற்றி நான்கு திசைகளிலும் இலிங்கங்கள் நிறுவப்பட்டுள்ளதால் பஞ்சலிங்கத் தலமாக இந்நகரம் விளங்குகின்றது. கோவிலின் இராஜகோபுரம் ஏழு நிலை மாடங்களுடன் 108 அடி உயரம் கொண்டதாக உள்ளது. இதில் திருவிளையாடற் புராணம், தசாவதாரம் மற்றும் தெய்வங்கள் கதைச் சிற்பங்களாக சித்தரிக்கப்பட்டுள்ளன.

பங்குனி மாதத்தில் 14, 15, 16 ஆகிய தேதிகளில் சூரியன் தனது கதிர்களால் உதயத்தில் சிவனை வழிபடும் அமைப்பாக இராஜகோபுரம் அமைந்துள்ளது சிறப்புக்குரியது.

இராஜகோபுர நுழைவாயிலின் மேலே படைப்புச் சிற்பமாக இரு புறமும் இரண்டு யானைகளுடன் கஜலட்சுமியின் உருவமும், அதேபோல் இராஜகோபுர முடிவில் மேல்பக்கத்தில் படைப்புச் சிற்பத்தில் கஜலட்சுமிக்குப் பதில் சிவலிங்கம் இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

சிவலிங்கத்தின் கீழ்ப் பகுதி பிரம்ம பாகம், நடுப்பகுதி திருமால் பாகம், மேற்பகுதி உருத்திரபாகம் எனக் குறிக்கப்படுவதால் மூன்று மூர்த்திகளும் சேர்ந்த திருமூர்த்தி அமைப்பாக இலிங்கம் அமைகிறது எனும் இந்து மதக் கோட்பாடு இங்கே உண்மையாகிறது.

இராஜகோபுரத்தைக் கடந்து சென்றால் சிறிய கோபுரம் ஐந்து மாடங்களுடன் உடையதாக உள்ளது. இரண்டிற்கும் இடைப்பட்ட இடத்தில் விளக்கேற்றும் வகையில் கற்றூண் ஒன்று உள்ளது. இதன் நான்கு பகுதிகளிலும் படைப்புச் சிற்பங்கள் உள்ளன. தெற்கே நோக்கியவாறு விநாயகரும், கிழக்கே நோக்கியவாறு உள்ள சிற்பங்கள் 12 நாகங்களால் அமைக்கப்பெற்று நாகப்பந்தரின்கீழ் காமதேனு தன் நாவால் சிவலிங்கத்தை வருடி, பால்சொரியும் காட்சியமைப்பில் உள்ளது. வடபுறத்திலுள்ள

படைப்புச் சிற்பத்தில் யானைமீது ஒருவர் ஏறியமர்ந்து, கிழக்கிலிருந்து மேற்காகச் செல்வது போலவும், கையில் பரசு அல்லது மழு என்னும் ஆயுதம் ஏந்தி போருக்குச் செல்வது போலவும் அமைந்துள்ளது. இதனை எறிபத்தர் என்று சிலர் சொன்னாலும் அது ஏற்கத் தக்கதாக இல்லை. ஏனெனில் நவகிரகங்களில் வட திசைக்குரியவராகச் சித்தரிக்கப்படும் குருபகவானின் வாகனம் யானையாகும். மேலும், வடதிசைக்காவலனான குபேரனின் வாகனமும் யானையாகும். அல்லது இந்திரன் என்றும் கொள்ளலாம். இதன் முடிவு அவரவர் விருப்பத்தைப் பொறுத்தது.

மேற்கு திசையில் ஒரு மனிதன் தனது மார்பில் இரு கைகளையும் ஒன்றிணைத்து அதில் ஒரு மானுடன் தலையிருப்பது போல் உள்ளது. இதனைப் புகழ்ச்சோழர் என்று கூறுபவர்களும் உள்ளனர். ஆனால் இவை யாவும் மறைபொருளாக ஏதோ ஒரு பொருளை உணர்த்துகின்றது என்று எண்ணத் தோன்றுகிறது.

தூணின் அமைப்பு பட்டை வடிவங்களாக உயர்ந்து, அதன் மேற்புறத்தில் பத்மபீட அமைப்பாக உள்ளது. தூணுக்கு வடபுறத்தில் நூற்றுக்கால் மண்டபம் எனும் புகழ்ச்சோழர் மண்டபம் உள்ளது. இதன் தூண்களில் பல்வேறு சிற்பங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. கோவிலின் தென்கிழக்கு மூலையில் ஒரு கிணறு உள்ளது. இது அக்னி மூலையில் இருப்பதால் அக்னி தீர்த்தம் என்று அழைக்கப் பெறுகின்றது. வன்னி மரத்தின் கீழ் பிரம்மதேவரது சிலைவடிவம் அமைக்கப்பட்டுள்ளது.

வெளிப்பிரகாரம் வலம் வரும் போது தென்மேற்கில் கிழக்கு நோக்கி அருள் செய்யும் வண்ணம் சித்தர் கருவூராரின் உயிர் சமாதி சன்னதி உள்ளது.

மேற்குத் திக்கில் ஒரு விநாயகர் கோவில் சமீப காலத்தில் கட்டப்பட்டுள்ளது.

வடமேற்கு மூலையில் வில்வமரத்தின் கீழ் நாகர்கள் நிறுவப்பட்டுள்ளன.

கோவிலின் உட்கோபுரத்தைக் கடந்தால். தூண்கள் பல வடிவங்களில் அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு தூண்களும் பல

விதச் சிற்ப வேலைப்பாடுகளைக் கொண்டதாக அமைந்துள்ளன.

கோவிலின் உட்புறம் ஈசான்யத்தில் வேள்விச்சாலையும் அதன் அருகே சந்திரனும், அக்னி மூலையில் மடப்பள்ளியும், அதனருகே சூரியனும், உட்பிரகார வெளிச்சுற்றில் மேடையமைப்பில் அறுபத்து மூவரும், நிருதி மூலை எனப்படும் கன்னி மூலையில் விநாயகர், அதன் இடபுறம் நாகேஸ்வரர்- சௌந்தரநாயகியும், அதன் வலப்புறத்தில் சோமாஸ்கந்தர் எனும் உமைமுருகு இறைவர் உற்சவத் திருமேனிக்கான இடமும், பிறகு தொடர் காலியிடம் உள்ளது.

வாயு மூலையில் ஆறு-முகமும் பன்னிரு கரங்களும் கொண்ட ஷண்முகர் வள்ளி தேவயானையுடன் காட்சி தருகின்றார். அதன் வலப்புறம் கஜலட்சுமியும் வலப்புறம் தண்டம் ஏந்திய தண்டபாணி, அதன் இடப்புறம் கரியமாலீஸ்வரர் - காந்திமதி அருள் புரிகின்றனர். வடபுறத்தில் பஞ்சலிங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. கோவிலில் அம்மனுக்கென்று தனியாகப் பிரகாரம் உள்ளது. கிழக்கு நோக்கி அலங்காரவல்லி எனும் கிருபாநாயகியின் சன்னதி பிரகாரம் வரும் அமைப்புடன் உள்ளது. தெற்கு நோக்கியவாறு சௌந்தரநாயகி எனும் வடிவுடையாளின் சந்நிதியும், அதனை அடுத்து இறைவனது பள்ளியறையும் உள்ளது. இரண்டு தாயாருக்கும் நந்தி உள்ளது சிறப்புமிக்கதாகும்.

கோவிலில் இலிங்கத்திற்கு நேர் எதிரில் கிழக்கிலிருந்து மேற்காக முதலில் கொடி மரமும், பிறகு பலி பீடமும், அதனை அடுத்து நந்திகேஸ்வரரின் திருமேனியும் உள்ளன.

மூலவர் இருக்கும் கருவறையைச் சுற்றி நர்த்தன விநாயகர், தென்முகக்கடவுள், உமையொருபாகன், (அர்த்தநாரீஸ்வரர்) பிரம்மதேவர், துர்கா பரமேஸ்வரி சந்நிதிகள் உள்ளன. இவை யாவும் கோஷ்ட தேவதைகளாகக் கூறப்படுகின்றன. இந்தச் சுற்று கோஷ்டப்பிரகாரம் என்று அழைக்கப்பெறும்.

துர்க்கா பரமேஸ்வரியின் எதிரில் சண்டிகேசுவரர் தனி சந்நிதி கொண்டு எழுந்தருளியுள்ளார். மேலும் நவக்கிரகங்கள், பைரவர் முதலிய திருவுருவங்களும் உள்ளன.

மகா மண்டபத்துள் நடராசர் உற்சவத்திருமேனி தெற்கு நோக்கி உள்ளது.

# நாலாயிர சக்கர பந்தனம்



(திருக்கோயிலின் உட்புறம் செல்லும் நுழைவு வாயிலில் வலப்பக்கத் தூண் ஒன்றில் செதுக்கப்பட்டுள்ளது.)

வாமயாமளி யாசிவா

வாசியானிலை வானவா

வானவாபல றாயவா

வாயறாவண யாமவா

## விளக்கம் :

இடது பாகத்தில் நீலவண்ணம் பெற்ற அம்பிகையைக் கொண்ட சிவபெருமானே! குதிரையாக, காளை வாகனத்தைக் கொண்டவரே! ஆநிலையப்பரான தேவரே! உயர்ந்த முதன்மை பெற்றவரே! பல அஞ்ஞான இருளைக் கடந்தவரே! அழகு மிக்கவரே! நள்ளிருளில் நடம் பயின்று ஆடும் நாதரே! மோட்ச வீட்டின் வாயிலை எனக்குத் தந்தருள்வீராக.

மேலும், அர்த்தநாரீஸ்வரர் இங்கு கருவறையின் பின்புறத்தில் இருப்பதனால் சிவசக்தி இங்கு முழுவடிவாக இணைகின்றனர் என்பதும் புலனாகின்றது. சிவசக்தியில் துவங்கி சிவசக்தியிலேயே அனைத்தும் முடிவடைகின்றன என்பதும் கருவூர் துவங்கி திருச்செங்கோடு வரை உள்ள ஏழு திருத்தலங்களும் கொங்கேழு என சிறப்புப் பெறுவதும் குறிப்பிடத்தக்கது.

## மூர்த்திச் சிறப்பு

இங்கு உள்ள ஆனிலையெனும் இலிங்க வடிவமானது முற்றிலும் சுயம்பு மூர்த்தியாகும். புற்றிடங்கொண்ட ஈசரை முதலில் வழிபடும் பெருமை பெற்றவராக பிரம்மதேவர் குறிப்பிடப்படுகின்றார். அதன்பின் காமதேனு துவங்கி விபண்டகன் வரை வழிபட்டதாக உள்ளது.

சுயம்பு லிங்கமானது வடபுறம் சிறிது சாய்ந்தாற்போல் உள்ளது. இதற்கு பல காரணங்கள் கூறப்படினும் ஏற்றுக்கொள்ளப்படுபவை இரண்டே.

ஒன்று கதிரவனின் கதிர் வழிபாட்டை பங்குனியில் ஏற்றுக் கொள்வதாக ஒன்று.

தைபூசத்தன்று தன்னுள்ளே ஐக்கியமான சித்தர் கருவூராரை தனக்கு இடப்புறத்தே அமர்த்தியமையால் என்பது மற்றொன்று.

காமதேனு வழிபடும்போது குளம்பு சிவலிங்கத்தின் மீது பட்டதால் ஏற்பட்ட குழிவான தழும்பு வடிவம் உள்ளது.

ஆ - நிலை என்பது பசுவானைக் காமதேனு வழிபட்டதாகவும் கொள்ளலாம்.

ஆன்மாக்கள் நிலைகொள்ளும் இடம் என்றும் கொள்ளலாம். (ஆ என்பது உயிர்களைக் குறிக்கும்)

இன்றுவரை சித்தர் கருவூரார் சிவவழிபாடு செய்து வருகின்றார் எனும் கூற்று அறிவிற்குப் புலனாகாத ஒன்று. தெய்வ சாட்சியத்தால் மட்டுமே இதை உணர முடியும்.

## அலங்காரவதி - அலங்காரவல்லி எனும் கிருபாநாயகி

ஆனிலையப்பரின் மூத்த ஆதிசக்தியாக இங்கு கிருபாநாயகி காட்சி தருகின்றார். கிழக்கு நோக்கி நின்ற கோலத்தில் .



அருள்மிகு அலங்காரவல்லி அம்பாள்

அருள்தரும் கிருபாநாயகியின் திருவடியின் கீழ் ஸ்ரீ சக்ர பீடம் பிரதிஷ்டை உள்ளது. மேலும் அதன்கீழ் சிங்க உருவமொன்று அமர்ந்திருப்பது போல் சித்தரிக்கப்பட்டுள்ளது. வடிவமைக்கப்பட்ட சிலையானது உயிர்த்துடிப்படையதாகவும், விழிகள் பேசுமாறும் உள்ளது. இதனை உணர்பவர்கள் அம்மனின் முழு அருளுக்குப் பாத்திரதாரர் ஆகின்றனர்.

அமாவாசை - பௌர்ணமி - அஷ்டமி ஆகிய நாட்கள் சந்திரனின் ஈர்ப்பு சக்தி உள்ளவையாகக் கருதப்படுகின்றன. சந்திரன் மண்டலத்துள் அம்பிகை அமர்ந்திருப்பதாக லலிதா சகஸ்ரநாமமும் கூறுவதால் மேற்படி நாட்கள் அம்மன் வழிபாட்டிற்கு உகந்தவையாகத் திகழ்கின்றன.

மேலும் தவப்பயனும் சிவார்ச்சனையுமே சிறந்தது என்பதை உணர்த்த கிருபாநாயகி எனும் உமையவள், கலைமகள், அலைமகளுடன் கயிலையிலிருந்து வஞ்சிவனம் வந்து ஆந்பொருணை எனும் அமராவதியில் நீராடி, நாள்தோறும் சிவார்ச்சனை செய்து பசுபதியீசனை வழிபட்டதாக அலங்காரவதிச் சருக்கம் கூறுகின்றன.

மேலோர், கீழோர் எனும் பாகுபாடின்றி, நல் எண்ணத்துடன் தியானித்து சிவார்ச்சனை செய்வதே சிறப்பாகும் என ஈசன் உமையவளிடம் கூறியதாகவும் சருக்கம் கூறுகின்றது.

## சௌந்தரநாயகி எனும் வடிவுடையாள்

ஆலய நிர்மாண விதிகளின் அடிப்படையில் சௌந்திரநாயகியின் ஆலயம் பிற்காலத்தே அமைக்கப்பட்ட ஒன்று என்பது தெளிவாகின்றது.

வடபுறத்தில் தெற்கு நோக்கியவாறு காட்சிதரும் சௌந்திரநாயகி தனது தவப்பயனால் ஈசனை மணந்த ஒரு மானுடப் பெண்.

கருவூருக்கு மேற்கே நான்கு கல் தொலைவில் ஆன்பொருணையாற்றங்கரையில் உள்ள அப்பிபாளையம் எனும் சிறு கிராமத்தில், வேட்டுவர் இனத்தைச் சார்ந்த கிராம நிர்வாக

அலுவலராகவும் மற்றும் தனவந்தராகவும் இருந்தவருக்கு வடிவுடையாள் எனும் பெண் இருந்தாள்.

தன்னுடைய அன்பாலும், பேச்சாலும், அறிவாலும் மற்ற பெண்களைப் போல் அல்லாமல் வித்தியாசமான குழந்தையாக வளர்ந்து, வயது ஏற, ஏற பேச்சு குறைந்து, மௌனம் அதிகரிக்க ஆரம்பித்தது. பசுபதி ஈசுவரரை வணங்க வேண்டும் எனும் மகளின் கோரிக்கையை நிறைவேற்றியதோடு, மகள் கேட்டபடியே சந்தனக் கட்டையால் சிவலிங்கமும் செய்து தந்தார். அதனை வைத்து தினமும் சிவார்ச்சனை மற்றும் வழிபாடுகளைச் செய்து வந்த வடிவுடையாள், புலால் உண்ணும் மரபினைச் சேர்ந்தவளாக இருந்தும் புலால் உண்ணாது, சைவ உணவருந்தும் அந்தணர் போல் வழிபாடுகளைச் செய்து வந்தாள். வழிபாடு நேரம் அதிகரித்து உணவுநேரம் ஒருவேளை ஆகும்போது தான் பெற்றவர்கள் கவலை கொண்டனர். திருமணம் செய்து வைத்தால் சரியாகிவிடும் என்றெண்ணி திருமண ஏற்பாடுகளைச் செய்தனர்.

வடிவுடையாளோ நான் பசுபதீசுவரரையே திருமணம் செய்வேன் என்று அடிக்கடிக் கூற ஆரம்பித்தாள். ஊரார் பைத்தியமென்று சொல்ல ஆரம்பித்தனர். பேய்பிடித்துவிட்டது என்றெண்ணி பெற்றோர் மந்திரவாதிகளையும், வைத்தியர்களையும் அழைத்து வந்தனர். வந்தவர்களிடம் தெளிவாக நான் பசுபதீசுவரரையே திருமணம் செய்து கொள்வேன். எனக்கு எந்த குறையும் இல்லை என்று அனுப்பி வைத்து விட்டாள்.

பெற்றோரிடம் பசுபதியை வணங்குங்கள் அவர் அருள் செய்வார் எனக் கூறினார். மீண்டும் திருமண ஏற்பாடுகளைத் தொடங்க விரும்பியபோது, வடிவுடையாள் அவர்களை நோக்கி 'பசுபதியை வழிபட்டுத் தியானிக்கும்போது என்னையே நான் மறக்கிறேன். ஒரு ஒளித் தோன்றுகிறது. புன்சிரிப்பான முகத்துடன் அவரைக் காண்கின்றேன். கனவில் தோன்றி அவர் உங்களுக்கு நடந்ததையும், நடக்கப் போவதையும் சொல்வார்' எனக் கூறினாள்.

அன்றிரவு பெற்றோர் கனவில் பசுபதீசுவரன், தோன்றி உம் மகள் வடிவுடையாளை, நாம் பங்குனி உத்திரத் திருவிழா ஏழாவது நாளில் திருமணம் செய்வோம் - அதனடையாளம்

அப்பிபாளையம் முழுவதும் அன்று பூச்சொரிந்திருக்கும் என்றும் கூறினார். பெற்றோர், பெரியவர்களிடம் கூற அவர்கள் ஆச்சரியத்துடன் பங்குனி உத்திரத் திருவிழாவின் ஏழாம் நாளை எதிர்பார்த்திருந்தனர்.

ஏழாம் நாள் உதயம் அப்பிபாளையம் முழுவதும் பூமழை பொழிந்திருந்தது. அனைவரும் வடிவுடையாளின் வீட்டை நோக்கிச் சென்றனர்.

அங்கே தியானத்திலிருந்த வடிவுடையாளின் கழுத்தினை தெய்வீக ஒளி வீசும் மலர்மாலை அலங்கரித்திருந்தது. அனைவரும் வடிவுடையாளைத் தொழுது பல்லக்கில் ஏற்றி பசுபதி ஈசுவர ஆலயத்திற்குக் கொண்டு வந்தனர். கருவறைக்குள் சென்ற வடிவுடையாள் இறைவனோடு ஐக்கியமானாள்.

இன்று வரை பங்குனி மாதம் ஆறாம் நாள் பசுபதியீசர் அப்பிபாளையம் செல்வதும், அங்கிருந்து ஏழாம் நாள் கரூர் பசுபதீசுவரர் ஆலயத்திற்கு வடிவுடையாளுடன் வருவதும் நடைபெற்று வருகின்றது.

இச்சையெனும் சக்தி, ஞானமெனும் தியானத்தால், கிரியை எனும் இறைசக்தியோடு ஒன்று கலப்பதே வடிவுடைநாயகியின் வரலாறு ஆகும்.




கல்யாண பசுபதீசுவரர் ஆலயத்தின் மேற்கில் மயில் வாகனமேறிய நிலையில் ஆறுமுகப் பெருமான் சந்நிதி உள்ளது. வள்ளி தெய்வானை ஆகிய இருவரும் தனித்தனியே உள்ளனர்.

சிவலாயங்களுள் முருகன் இருப்பது வியப்புக்குரிய ஒன்றல்ல. ஆனாலும் அருணகிரிநாதர் இவ்வாலய ஆறுமுகப் பெருமான் மீது திருப்புகழ் பாடியமையால் ஆறுமுகன் சிறப்படைகின்றார்.

சோழநாடு சோறுடைத்து - எனும் பழமொழிக்கேற்ப கருவையிலும் வயல் சூழ்ந்திருந்ததெனத் தெரிய வருகின்றது.

வஞ்சியில் வயல் சூழ்ந்திருந்தமையால் கருவூரை வயலூர் என்று எண்ணக் கூடியதாக இருக்கிறது. குடபுலம், குணதிசை என்பதை உபயோகப்படுத்தியுள்ளமையால் திருச்சி - வயலூர் எனப்படும் குமாரவயலூருக்கு மேற்கே உள்ள கரூரில் உள்ள ஆறுமுகப் பெருமானே! எனப் போற்றியிருப்பதும் தெரிய வருகிறது. (குணதிசை - குடபுலம் என்பவை மேற்றிசையைக் குறிப்பவை.)

கருவூர் - வஞ்சி - கருவைப்பதி - கர்ப்பபுரம் என அவர் கருவூரைப் பாடியிருப்பதும் குறிப்பிடத்தக்கவை.

## வராககிரி

சூதபுராணிகர் சனகாதி முனிவர்களது வேண்டுகோளுக் கிணங்க கருவூர்த்தலச் சிறப்பினைச் சொல்லுமிடத்து. கொங்கேழு சிவத்தலங்களையும் தென்புறத்தே வராககிரி என்னும் மலையும் இருப்பதைக் குறிப்பிடுகின்றார்.

காசிப கோத்திரத்திலுதித்த வராக முனிவர் என்பவர் வன்னி மரத்தால் சிவலிங்கம் நிறுவி, சரியை, கிரியை எனும் இரண்டாலும் வழிபட்டு வந்தபோது சிவபெருமான் காட்சி தந்து அவரது விருப்பம் யாதெனக் கேட்டார்.

சிவயோகத்தைப் பற்றி கேட்ட முனிவருக்கு, இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி எனும் எட்டு நிலைகளை உடையது என்று பதிலுரைத்தார்.

யோககிரியாக இம்மலை படைக்கப்பெற்றமையால் இதனிடத்தே யோகசித்தி பெற்று முக்தியடைவாய். உனக்கு யோகீசன் என்னும் பெயரும், உனது பெயரால் வராககிரி என்று இம்மலை அழைக்கப்படும் என்றும் வரமளித்தார்.

(இவ்வராககிரியே தற்போது பன்றிமலை என்றழைக்கப்படுகிறது. அமராவதி நதியின் துவக்கம் ஆதியில் இம்மலையிருந்ததாகத் தெரியவருகின்றது.)

## ஆம்பிராவதி எனும் அமராவதி

மழைவளம் குறைந்து மண்ணுயிர்கள் வாடியபோது, சிவபெருமான் உமையை அழைத்து, உமையின் அருளால் வராககிரியிலிருந்து நதியாகத் தோன்றுறச் செய்யுமாறு கூறினார்.

ஆம்பிராவதி வராககிரியிலிருந்து உற்பத்தியாகி திருமுக்கூடலில் கலக்கும் வரை எண்ணிறந்த சிவத்தலங்கள் உள்ளன. (மற்ற இரு ஆறுகள் காவிரியும், மணிமுத்தாறும் ஆகும்)

அம்மையின் திருவருளே நதியாக உருவெடுத்ததால் அம்பா நதி என்றும், பல்லாயிரம் முனிவர்கள் மாமரங்களாக மாறி தவமியற்றி நிற்க, அந்நிழலில் வருவதனால் ஆம்பிரமா நதி என்றும், காமதேனுவானது கருவூரை அடைவதற்குமுன் இருமருங்கிலுள்ள பல திருத்தலங்களை வழிபட்டமையால் பொருணை என்றும், - இந்நதி அழைக்கப்பெற்று பின் மருவி அமராவதியாயிற்று.

யோகேசுவரம் துவங்கி முக்கூடல் வரை, வராகர் முதல் பிரம்மா திருமால் வரை பூசித்த எண்ணற்ற தலங்கள் நதியின் இருபுறமும் உண்டு. அவற்றுள் சந்திரன் குருபத்தினி சாபம் தொலைய பூசித்த சோமேசலிங்கம், அனந்த கணேசன், காஞ்சேசன், புரம்பு வனத்தில் தெய்வீக ஆரிடலிங்கம் கொங்கனேசத்தில் - கொங்கணேச்சுரலிங்கம், காளிசலிங்கம், தாரகா கணங்களால் வழிபட்ட தாரகேச்சுரலிங்கம், வீரபத்திரர் பூசித்த வீரேசலிங்கம், சாலலிங்கம், காட்டுலிங்கம், திலகுலேச்சுர-லிங்கம் காவிரியுடன் கலக்குமிடத்தில் மணியீசன் எனும் லிங்கமும் உள்ளன. அவற்றுள் ஆதிமாபுரம் எனும் கருவூரிலுள்ள பஞ்சலிங்கங்களான ஆதிநாயகர் எனும் பசுபதிலிங்கம், கோடீசுரலிங்கம், கயிலாயநாத லிங்கம், கரியமாலீசலிங்கம், வஞ்சுளேச்சுரலிங்கம் என்பவை மிகப் புகழ்பெற்றன. இதனாலேயே கரூர் பஞ்சலிங்கத் தலம் என்றாயிற்று.

## பிரம்மதேவ சாப நீக்கமும், காமதேனு பூசித்தலும்

அத்தாப்பிரளயம் என்பது பிரம்ம உறக்கம் கொள்ளும் ஓரிரவில் உலகவுயிர்கள் யாவையும் அழிவதைக் குறிக்கும்.

மீண்டும் சிவபெருமானது அருளால் பிரம்மனிடமிருந்து உயிர்கள் தோன்றும் - மறுயுகம் பிறக்கும்.

உயிர்கள் அழிந்தமையால் வருந்தியதோடு மட்டுமல்லாமல் பிரம்மன் தானே ஆதி கர்த்தா என்றும், தான் படைப்புத் தொழிலை செய்யாவிடின், காத்தல், அழித்தல், முதலியவைகளை செய்பவர்களுக்கும் வேலையில்லை என்றெண்ணி இறுமாப்படைந்தான்.

இறைவன் பிரம்மனது இறுமாப்பையும், அறியாமையையும் போக்க எண்ணினார். பிரம்மன் படைப்பினைத் துவங்கினான். ஒரு உயிரும் உருவாகவில்லை. கர்வம் ஒழிந்தது. சிவனை நோக்கி தவமியற்றத் துவங்கினான்.

சிவன் கயிலையை அடைந்துத் தன்னை வணங்கிய காமதேனுவை நோக்கி, நிலவுலகம் சென்று பிரம்மனைப் போல் படைப்புத் தொழில் செய்வாயாக என வரமளித்தார்.

தவமியற்றிய பிரம்மனுக்கு காட்சி தந்து, தவத்துக்கேற்ப நிலவுலகத்தில், ஆம்பிரமா நதிக்கரையில் வஞ்சிவனம் எனப்படும் கருவூரில் தியானித்து என்னை வழிபடுவாயாக என்றருளினார்.

தேவர்களும் முனிவர்களும் சூழ, அர ஹர என துதித்தவாறு பிரம்மன் அன்ன வாகனத்திலிருந்து இறங்கி, ஆம்பிர நதியில் வேதங்களை உச்சரித்து நீராடி, காமதேனு படைத்த சராசரங்களின் அடிச்சுவடுகளைக்கண்டு பசுபதிப் பெருமானால் யாதும் செய்ய இயலும் என்றெண்ணி வியந்தவாறே உயிர்கள் அழிந்தமையால் ஏற்பட்ட பாபமும், சிவ நிந்தனையில் ஏற்பட்ட சிவ அபராதமும் தீர வேண்டுமென எண்ணி வழிபாடு செய்தார்.

சிவபெருமான் நான்முகன் முன்தோன்றி அனைத்து தீமைகளையும் களைந்தோம். இத்தலத்தில் பெரு வேள்வி ஒன்று இயற்றி கலைமகளை மணம் செய்து படைப்புத் தொழிலையும் இவ்விடத்திலேயே நடத்துவாயாக எனத்திருவாய் மலர்ந்தருளினார்.

பிரம்மனும் திரு ஆனிலைத் தென்திசையில் வஞ்சளேஸ்வரத்தின் மேற்குப் பகுதியில் ஆம்பிராவதியின்

வடபுறத்தில் தன் பெயரால் பிரம்மதீர்த்தம் ஏற்படுத்தி வழிபாடு செய்தார். பின் வெண்ணெய்மலையின் வடபால் பெரிய வேள்விச் சாலை ஏற்படுத்தி வேள்வி செய்தார்.

அத்திரி, அகத்தியர், பரத்துவாசர், வியாசர், சுகர், காசிபர், கோசிகர், வசிட்டர், பிருகு, துர்வாசர், வாமதேவர், ததீசி, கண்ணுவர், சாமதேற்கியர், சாபாலி, சாண்டில்லியர், உரோமபாதர், உபமன்னியர், சங்கணர், பராசரர், கவுதமர், சுதீக்கணர், மிருகண்டு, மார்க்கண்டர், விபாண்டகர், விச்சுவாவசு, மரீசி, வாமத்திரி, கவுண்டின்னியர், வால்கில்லியர், அட்டாக்கின், தெக்கணர், புலத்தியர், சனகர், சனாந்தகர், சனந்தரர், சணற்குமாரர், நாரதர், கமலமாதவர், தத்தாத்திரேயர், அங்கிரார் முதலிய முனிவர்களும், விச்சையர், இயக்கர், பூசரல் முதலானோரும் வந்திருந்தனர்.

நான்முகன் அவர்களை வரவேற்று அவரவர்க்குரிய இடங்களில் அமர்த்தி, பசுபதியின் திருவடியை மனதில் நிறுத்தி, வேள்வி இயற்றி, அவிர்ப்பாகத்தை அவர்களுக்கு வழங்கி, உலக மாதாவாகிய அலங்காரவதியையும், ஆனிலையன்னலையும் வணங்கி வேள்வியை முடித்தார்.

பின் அந்தணர் ஆசியுடனும், முனிவர்களது வாழ்த்துடனும் கலைமகளை மணம் முடித்தார்.

நான்முகன் ஆனிலை அண்ணலுக்கு அழகிய திருக்கோவில் அமைத்தார். அக்கோவிலின் தென்கிழக்குத் திசையில் காளிகோவில் ஒன்றும், ஐயனார் கோவில் ஒன்றும் கட்டுவித்தார். (காளிகோவிலே கருவறையின் காவல் தெய்வமான வஞ்சியம்மன்) வஞ்சி வனத்தை தேவலோகம் போல் மாற்றினார். மேருமலைக்கு நிகரான திருத்தேர் செய்து மூவுலகத்தவரையும் வரச்செய்து பங்குனி உத்திரத் திருவிழாவினை நடத்தி முடித்து, தேவர்கள் போற்ற நா மகளுடன் தனது உலகமான சத்யலோகம் சென்றடைந்தார்.

காமதேனு மண்ணுலகம் வந்து, தவம் செய்ய இடம் தேடியலைகையில் எதிர்ப்பட்ட நாரத முனிவரிடம் கேட்க, அவர் காமதேனுவே ஆம்பிர நதிக்கரையில் வஞ்சி வனம் எனும் தலமே தவத்திற்குச் சிறந்தது எனக் கூறினார்.

காமதேனு வராககிரி துவங்கி சிவத்தலங்களை வழிபட்டவாறே வஞ்சிவனம் வந்து தவம் செய்யத் துவங்கியது. ஒரு நாள் ஆகாயத்தினின்று ஒரு அசரீரி காமதேனுவே! வஞ்சி வனத்துள் ஒரு புற்றிடத்தில், பாதாளத்தில் நின்று தோன்றும் ஆதிலிங்கம் எனும் மகாலிங்கம் உள்ளது. அது சுயம்பு மூர்த்தியாகும். அதனைப் பூசித்து வருவாயாக! என்று ஒலித்தது.

காமதேனுவும் அவ்வாறே சென்று, ஆதிலிங்கம் கண்டு, தன் மடியிலிருந்த பாலைச் சொரிந்து தினமும் வழிபாடு செய்து வருகையில், ஒரு நாள் அதன் குழம்பு இறைவனின் திருமுடியில் இடப்பாகத்தில் பட்டுவிடவே, அதிலிருந்து இரத்தம் சொரிய ஆரம்பித்தது.

அதைக் கண்ணுற்ற காமதேனு மனம் வருந்தி பதைபதைத்தது. அப்போது இறைவன் தோன்றி காமதேனுவே! நீ வருந்தாதே! இது உன் பிழையன்று, எமது திருவிளையாடலே! நீ நம்மை வழிபட்டமையால், பசுபதி நாதர் என்ற பெயரால் என்னை புவனங்கள் மூன்றும் போற்றக் கடவன.

இவ்விடத்திற்குத் தென்திசையில் சராசரங்களின் அடிச்சுவடுகள் வைக்கப்பட்டுள்ளன. பிரம்மன் தனது இயலாமையில் ஏதும் செய்யாது நிற்பான். நீ அங்கு சென்று என்னை நினைத்தால், உன்னாலும் படைப்புத் தொழில் செய்ய இயலும் என்றருளிவிட்டு மறைந்தார்.

காமதேனுவும் அவ்வாறே செய்ய சராசரங்கள் படைக்கப்பட்டன. வடதிசையில் வெண்ணெய்மலை என்றொரு மலையையும் காமதேனு உருவாக்கியது. அதன் கிழக்குத் திசையில் தேனு தீர்த்தம் உருவாக்கி சிவார்ச்சனை செய்து வந்தது.

தனது திருவுளம் இருப்பின், பிரம்மன் மட்டுமல்ல, ஒரு பசுவும் படைப்புத் தொழில் செய்யும் என்பதை உணர்த்தவே இத்திருவிளையாடல் நடத்தப்பெற்றது.

பிறகு பிரம்மனிடம் படைப்புத் தொழிலை ஒப்படைத்துவிட்டு காமதேனுவிற்கு சுவர்க்கம்சென்று வாழ்வாயாக! என்று சிவபெருமான் கூறினார்.

வெண்ணெய்மலையானது தற்போது முருகன் குடிகொண்டதாக உள்ளது. வெப்பம் நிறைந்த கோடையிலும் குளிர்ச்சி பொருந்தியதாக இருக்கிறது. (கருவூருக்கு வடக்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது).

## எறிபத்தர்-சிவகாமியாண்டார் - புகழ்ச்சோழர்

புகழ்ச்சோழர் என்னும் சோழ மன்னன் உறையூரைத் தலைநகராகக் கொண்டுஆட்சிபுரிந்த காலத்தே கருவூரில் தன் பரிவாரங்களோடு திறை வசூலிக்கும் பொருட்டு வந்து தங்கியிருந்தார். ஒரு நாள் மன்னனுடைய பட்டத்து யானை அமராவதியில் நீராடச் சென்றது. பாகர் இருவரும், பணியாளர்களுமாக ஐந்து பேர் சென்றனர்.

அக்காலத்தே சிவகாமியாண்டார் எனும் வயது முதிர்ந்த சிவபக்தர் ஒருவர் தினமும் விடியலில் நதியில் நீராடி, நந்தவனத்துள் பூக்கொய்து குடலையில் வைத்துக் கொண்டு, ஆனிலையப்பருக்கு மாலைகள் சாற்றுவதை வழக்கமானப் பணியாக மேற்கொண்டிருந்தார். அன்றும் அவ்வாறே வந்து கொண்டிருக்கும்போது, யானையானது பூக்குடலையை துதிக்கையாற்பற்றி கீழே எறிந்து மிதித்துச் சென்றது. சிவகாமியாண்டார் மனம்பதைத்து கண்ணீர் விட்டுச் செய்வதறியாது நின்றார்.

அவருடைய காலத்திலேயே எறிபத்தர் என்றொரு சிவனடியார் இருந்தார். அவருக்கு இறைத் தொண்டைக் காட்டிலும் அடியவர்களுக்கு ஏற்படும் துன்பங்களைக் களைவதே சிறந்த தொண்டாகத் தெரிந்தது. எந்நேரமும் பரசு என்னும் கோடாரியைத் தன் வசம் வைத்திருப்பார்.

சிவகாமியாண்டாரது அழுகுரல் கேட்ட எறிபத்தர், விரைந்து வந்து நடந்ததறிந்து, யானை சென்ற வழியே சென்றார். யானையைக் கண்டார். அதன் பிடறியில் ஏறினார். பட்டத்து யானையின் துதிக்கையை வெட்டியதோடு மட்டுமல்லாமல், நடந்த

தீச்செயலை தடுக்காமல் இருந்த பணியாளர்கள் ஐவரையும் கொன்று பழி தீர்த்தார்.

பட்டத்து யானை கொல்லப்பட்ட சேதியைக் கேட்ட மன்னன், பகைவர் வந்து விட்டனரோ? என்றெண்ணி விரைந்து குதிரையேறிச் சென்றான். பின் தொடர்ந்து பரிவாரங்களும் சென்றன. யானை மாய்ந்து கிடந்த இடத்தில் பகையாளி யாரும் காணாது, சிவனடியாராகிய எறிபத்தர் மட்டுமே நிற்கக் கண்டான். அனைவரும் இவரே பட்டத்து யானையை மாய்த்தவர் என எறிபத்தரைக் காட்ட மன்னன், ஏதோ நடந்திருக்குமென்று உணர்ந்தான்.

எறிபத்தர், மன்னன் தன்னை தண்டிப்பான் என்றெண்ணினாலும், தான் செய்தது தவறல்ல! தொண்டே என்றெண்ணி அஞ்சாமல் நின்றாரா? அல்லது தான் செய்தது தவறு. கொலைத் தொழில் புரிந்தது குற்றமென எண்ணி செய்வதறியாது நின்றாரா? என்பது தெரியவில்லை.

நடந்ததைக் கேள்வியுற்ற மன்னன், எறிபத்தரை நோக்கி வந்தான். தன் உடைவாளையெடுத்தான். யானையையும், பாகரையும் கொன்றுவிட்டீர். பட்டத்து யானையின் உரிமையாளனாகிய எனக்கும் இப்பாவத்தில் பங்கு இருக்கின்றது. என்னையும் கொல்வீராக! என மன்றாடினான்.

மன்னனைத் தான் கொல்லாவிடில், மன்னன் தற்கொலை செய்து கொள்ளக்கூடும் என்றெண்ணிய எறிபத்தர், இத்துணை நல்லவருக்கு தீங்கு செய்து விட்டோம்! என்றெண்ணித் தன் தலையைத் தானே, மன்னரது உடைவாளால் அரியத் தொடங்கினார். மன்னன் திகைப்படைந்து அவர் தம் செயலைத் தடுத்தான். இருவரது சிவபக்தியையும் உலகுக்கு உணர்த்திய பசுபதிநாதன், தன்னருளால் யானை, பாகர், பணியாளர்களையும் உயிர்ப்பித்ததோடு மட்டுமல்லாமல், சிவகாமியாண்டாரது பூக்குடலையையும் திரும்பச் செய்தார்.

மற்றொரு நாளில் திறை வசூலுக்காக புகழ்ச்சோழர் மீண்டும் கருவூர் வந்திருந்த போது, அனைவரும் திறை செலுத்தி மன்னனைப் போற்றி நின்றனர். அப்போது மன்னன் இன்னும்

திறை செலுத்தாதோர் யாரேனும் உளரா? என வினவினார். குறும்பொரையூர் அதியன் திறை செலுத்த மறுக்கின்றான். வலிமை மிக்க அரண் உடையவனாய் இருப்பதால் இறுமாப்போடு உள்ளான், என பதிலுரைத்தனர்.

மன்னன் அதியன் மீது போர் தொடுக்கக் கூறினார். போர் நடந்தது. அதியன் புறமுதுகிட்டு ஓடினான். போரில் கொல்லப்பட்ட படைத் தலைவர்களது தலையைக் கண்ணுற்ற அரசன் அவற்றுள் சடைமுடியோடு கூடிய ஒரு தலையினைக் கண்டான்.

என்ன பாவம் செய்தேனோ? சிவனடியாரைக் கொன்ற பாவம் அடைந்து விட்டேனே? என மனம் பதைத்து தனது செயலுக்குப் பரிகாரம் தேட விழைந்தான்.

அமைச்சரை நோக்கி, இப்பாவம் தீர நான் தீக்குளித்தலே சரியான தீர்வாகும். உடனடியாக பசுபதிநாதர் ஆலயத்துள் தீக்குழி ஏற்படுத்துங்கள். நான் தீப்புக வேண்டும் எனக் கூறினான். அமைச்சர்கள், அரசே! இது வேண்டாம், வேறு பரிகாரம் செய்வோம் இது முறையன்று எனக் கூற மன்னன் மறுத்து தன் முடிவில் உறுதியாக நின்று, ஆனிலையப்பர் கோவிலுள் தீக்குண்டம் ஏற்படுத்தி தீப்புகுந்தான். தேவர்கள் பூமாரி பொழிந்து சுவர்க்கத்திற்கு அழைத்துச் சென்றனர்.

## முசுகுந்தன்

ஓரறிவு முதல் ஆறறிவு பெற்ற உயிர்கள் அனைத்தும் சிவனை வழிபடுகின்றன. அதனால் பலன் அடைகின்றனர் என்பதற்கு ஐந்தறிவு பெற்ற குரங்கு ஒன்று விளையாட்டாய் வில்வ தளங்களை சிவன் மீது போட்டமையால் அரசபதவி அடைந்தது. அதுவே முசுகுந்தன் எனும் சோழசக்கரவர்த்தியாயிற்று.

உமாதேவியுடன் சிவபெருமான் ஒருநாள் கயிலை மலைச்சாரலில் வில்வ மரத்தடியில் வீற்றிருந்தார். அப்போது மர்த்தின் மீதிருந்த ஒரு குரங்கு விளையாட்டாய் வில்வதளத்தினை ஒவ்வொன்றாகப் போட்டது.

உமாதேவி கோபமடைந்தபோது, சிவபெருமான் உமையவளை சாந்தப்படுத்தி, அது நம்மை அர்ச்சனை செய்கிறது எனக் கூறி அதற்கு நல்லுணர்வு உண்டாகுமாறு செய்தார்.

உடனே குரங்கு கீழிறங்கி வந்து, சிவபெருமானை வணங்கி ஐயனே! அறியாது செய்த பிழையை மன்னித்தருள்க என்று கூற, சிவனோ, முசுவே! என்னை அர்ச்சனை செய்தமையை யாம் ஏற்றுக் கொண்டோம். இதன் பயனாக சோழர் குலத்தில் சக்கரவர்த்தியாக தோன்றக் கடவாய் என வரமளித்தார்.

முசுவோ, அய்யனே! நான் அப்பொழுதும் இந்நிலை மறவாதிருக்க, முகம் மட்டும், குரங்கு முகமாகவே இருக்க வேண்டும் என கேட்டுக் கொண்டது.

சிவனும் அவ்வாறே ஆகட்டும் என்றருளினார்.

முசுகுந்தன் கருவூரில் பிறந்து, முடிசூடி ஆனிலை அண்ணலை அர்ச்சித்து வந்தார். அனைத்துச் சிவத்தலங்களையும் தரிசனம் செய்து வந்தார்.

திருவாரூரில் இருக்கும் காலத்தே, தேவேந்திரன் அசுரர்களோடு போர் புரிந்து, அமராவதியை இழந்ததைக் கேள்விப்பட்டு, தனது படைகளுடன் வானுலகம் சென்று, அசுரர்களை வென்று தேவேந்திரனை மீண்டும் இந்திர பதவியில் அமர்த்தினார்.

திருமாலிடத்தில் சிவதீட்சை பெற்று கருவூர் ஆனிலை அண்ணலை வணங்கி வந்தான்.

பிறகு பிரளயம் வந்து படைப்புகள் அழிந்து மீண்டும் உயிர்கள் துவங்கியபோது, முசுகுந்தனும் பிரம்மனைப் போல் படைப்புத் தொழிலைச் செய்து வந்தான்.

அக்காலத்தே திருப்பரங்குன்றத்தில் திருமுருகனுக்கும், தெய்வானைக்கும் நடைபெற்ற திருமண வைபவத்தில் கலந்து கொள்ளும் பேறு பெற்றான். பல்லாண்டுகள் அரசாட்சி செய்து பின் தேவலோகம் சென்றான்.

கருவூருக்கு நிகரான தலமும், ஆனிலையப்பருக்கு நிகரான

தெய்வமும், வில்வ அர்ச்சனைக்கு மீறிய அர்ச்சனையும் இல்லை என்பது இதன் மூலம் தெளிவாகிறது.

## பதரி வனமும் வியாச முனிவரும்

பிரம்மனது வேள்விக்கு வந்திருந்த வியாச முனிவர் கருவூரை விட்டுப் போக மனமில்லாதிருந்து, ஆநிலை அண்ணலை நோக்கி இறைவா! இங்கேயே நான் இருக்கும்வண்ணம் நல்லதொரு இடத்தைச் சொல்வீராக என வரம் கேட்டார்.

ஆனிலையப்பரும் அக்கினி திக்கில், ஆம்பிரா நதியின் வடகரையில் இலந்தைவனம் என்று ஒன்றுள்ளது. அங்கே தவச்சாலை அமைத்து தவமியற்றுவீராக! என்று கூறினார்.

வியாசரும் தன் மாணாக்கருடன் பன்னெடுங்காலம் இருந்து ஆனிலை அண்ணலை போற்றித் துதித்தார்.

## எண்திசைப் பாலகர்க்கு அருளியது

வஞ்சி வனத்தில் படைப்புத் தொழில் துவங்கிய காலத்தில் இந்திரன், அக்னி, எமன் ஆகிய மூவரும் பசுபதிப் பெருமானை முறையோடு பூசித்தனர்.

ஆனிலை அண்ணல் அவர்களது வழிபாட்டில் மகிழ்ந்து □இந்திரனை தேவர்கட்கு அரசனாக்கி, கீழ்த்திசைக் காவல் உரிமையையும், அக்கினியை தென்கிழக்கின் காவலனாகவும், எமனை தென்திசைக் காவலனாகவும் நியமித்தார்.

வருணன் இறைகோவில் நீர்தெளித்து வழிபாடு செய்ததனால் மேற்குத் திசை காவலனாகவும், வாயு திருவிளக்கிட்டு பூசித்தமையால் வடமேற்கு திசைக்கு காவலனாகவும், குபேரன் நவமணிகளால் அர்ச்சித்தமையால் வடதிசைக் காவலனாகவும் ஈசானன் பசுபதியை பூசித்தமையால் ஈசான்ய திசைக் காவலனாகவும் நியமித்தார்.

திருமாலின் பகைவனான முராசுரன் மரபில் வந்த அக்கினி

பக்கணன் என்னும் நிருதன் மகன் துற்சயன் என்பவன், பேராற்றல் படைத்தவன். ஊனும் புலாலும் உண்பவன். வேதம் ஓதும் வேள்வியியற்றும் அந்தணரை அழிக்கும் பாவம் செய்பவன். அவன் ஆனிலையண்ணலை வழிபாடு செய்யும் முறைகண்டு, மன இயல்பு மாறி, வில் அம்புகளை விட்டெறிந்தான். ஆம்பிரமாநதியில் நீராடி பசுபதிப் பெருமானை ஒரு மனத்தோடு வழிபட்டான். இறைவன் மகிழ்ந்து தென்மேற்குத் திசைக்காவலனாக அவனை முடிசூட்டினான்.

## அசுரகுரு சுக்கிரனும், மிருத சஞ்சீவினியும்

தேவ, அசுரர்களுக்கு இடையே போர் ஏற்பட்டு, இருபுறமும் அழிவேற்பட்டாலும், அமிர்தம் உண்ட காரணத்தால் தேவர்கள் அழியாதிருத்தல் கண்ட சுக்கிராச்சாரியார், தானும் அதற்கீடான ஒரு வரத்தைப் பெறவேண்டினார்.

கருவையை அடைந்து, ஒற்றைக்காலால் இலந்தை வனத்தில் தவமியற்றினார். அவரது பக்திக்கு மகிழ்ந்த சிவன், அவரது விருப்பப்படியே மிருதசஞ்சீவினி" எனும் இறந்தவரை உயிர்ப்பிக்கும் மந்திரத்தை உபதேசித்தார்.

மீண்டும் போர் துவங்கியது. அழிந்த அசுரர்களை மிருதசஞ்சீவினி மந்திரம் கொண்டு மீண்டும் உயிர்ப்பித்தார். இது கண்டு கவலையுற்ற தேவர்கள் தங்களது குருவான வியாழனிடம் சென்று முறையிட்டனர்.

வியாழன் தன் மகனாகிய கசனை அழைத்து, சுக்கிராச்சாரியாரிடம் சீடனாக இருந்து மிருதசஞ்சீவினி மந்திரம் கற்று வருமாறு அனுப்பினார்.

தேவர்கள் மிருதசஞ்சீவினி மந்திரம் கற்றுவந்தால் குருவைப்போல் கசனுக்கும் வேள்வியில் அவிர்பாகமளிப்போம் எனக் கூறினார்.

சுக்கிரனும், களங்கமற்ற கசனைத் தன் சீடனாக ஏற்று பசுநிறைகளை மேய்த்துவரச் செய்தான். அனைத்துப் பணிகளையும் செய்தான். தேவ வருடத்தில் ஓராயிரம் வருடங்கள் பணி செய்து வந்தான்.

சுக்கிரனின் மகளாகிய தேவயானி, கசனிடம் மிக்க அன்பு கொண்டிருந்தாள். அவள் நாள்தோறும் புதுமலர்களை பறித்துத் தருமாறும், யாழிசை மீட்டுமாறும் கசனிடம் கேட்க அவனும் அவ்வண்ணமே செய்தான்.

அசுரர்கள் அனைவரும் ஒன்று கூடி, கசன் மிருதசஞ்சீவினியை கற்க நம் குருவினிடத்தில் வந்திருக்கின்றான். அவனை அழிக்க வேண்டும் என்றெண்ணினர். மாடு மேய்க்கும்போது அவனை அடித்து புலிகளுக்கு இரையாக்கிவிட்டனர். தேவயானி கசன் வராதது கண்டு, சுக்கிரனிடம் சொல்ல, சுக்கிரன் கசனை அழைக்க, கசனும் வந்தான். காலம் தவறியமைக்கு காரணம் கேட்க கசனும் நடந்ததைச் சொன்னான்.

மறுமுறையும் கசனைக் கொன்று கடலில் வீசிட, மீண்டும் கசன் உயிர்பெற்று வந்தான்.

இனி கசன் வரவே கூடாது என்றெண்ணிய அசுரர்கள் கசனைப் பிடித்துக் கொன்று எரித்துச் சாம்பலை மதுவில் கலந்து சுக்கிராச்சாரியாரிடம் கொடுத்து அருந்தச் செய்தனர். சுக்கிரனும் மதுவருந்தி மனமகிழ்ந்தான். மதுவில் கசனது சாம்பல் இருப்பது அவனுக்குத் தெரியாது.

கசன் வராதது கண்டு, அவனை அழைக்க, குருவே! நான் எப்படி வருவேன் எனக்கூற, நடந்ததை அறிந்து அவனுக்கு மிருதசஞ்சீவினி மந்திரத்தை உபதேசித்து தன் வயிற்றைக் கிழித்துக் கொண்டு மாண்டுவிட்டார்.

கசன் உயிர்பெற்று சுக்கிரனையும் உயிர்பெறச் செய்தான். அசுரர்களது செயலால் கோபமடைந்த சுக்கிரன் யாராவது மதுவை அருந்தினால் சண்டாளர் ஆகக் கடவது எனச் சபித்தான். கசனுக்கும் தன் இருப்பிடம் செல்ல விடைகொடுத்தான்.

தேவயானி கசனை மணம் செய்ய விரும்பி கேட்க, குருவின் மகளாகியதாலும், உனது தந்தையின் வயிற்றிலிருந்து வெளிபட்டமையாலும் நான் உன் சகோதரனாகின்றேன். சகோதரன், சகோதரியை மணப்பது முறையன்று என்றுரைத்தான்.

அதைக் கேட்ட தேவயானி, தந்தையால் கற்ற மந்திரம்

மறக்கக்கடவது எனச் சபித்தாள். கசனும் உனக்கு பிராமண மணமகன் கிடைக்காமல் அன்னிய இனத்தவனை மணப்பாய் எனச் சபித்தார்.

கசன் வேறொரு தகுதிபெற்ற அந்தணனுக்கு மிருதசஞ்சீவினி உபதேசம் செய்து இறந்த உயிர்எழும்படிச் செய்தான்.

தேவர்களும் கசனுக்கு அனைத்து வேள்விகளிலும் அவிர்ப்பாகம் கொடுத்து வந்தனர்.

## கோபிதாரத்துவஜனும் அகத்திய மாமுனியும்

விதியின் வலிமையானது எவரையும் விடாது. நல்லவர்களுக்கும் ஊழ்வினையை சிலகாலம் அனுபவித்தேயாக வேண்டும் என்பதற்கு கோபிதாரத்துவஜனின் வரலாறு ஒரு சிறந்த உதாரணம் ஆகும்.

உச்சயினி எனும் விசாலை நகரத்தினை கோபிதாரத்துவஜன் என்னும் (கோபிதாரம் - கடம்பமரம், துவம்சம் - கொடி) மன்னன் சீரும் சிறப்புமாக ஆண்டு வந்தான். ( கடம்பமரம் முருகனுக்கு உகந்தது - இதனைக் கொடியாக கொண்டமையால் மன்னன் இப்பெயர் பெற்றான்) மேகம் போன்ற கொடையிலும், காமனாய் மங்கையர்க்கும், தர்மன் போல் நீதிநெறியிலும், இடிபோல் பகைவர்க்கும் அகத்தியர் போல் கல்வியிலும் உதாரணமாக காட்டுகின்ற வகையில், சிவனடியார்க்கு சீரிய முறையிலும் வாழ்ந்து வந்தான்.

கோபிதாரத்துவஜனைக் காண அகத்திய மாமுனி வந்தார்.

இங்கு - தான் விதி தன் வலிமையைக் காட்டியது. அனைவரையும் மதித்துச் சிறப்புப் செய்த மன்னன், அகத்தியரை மதியாது இருந்தான். முனிவர் கோபமுற்றார்.

பிரமிட்ட முனிவரை அழைத்து, நான் விரதமிருப்பதால் என்னால் சபிக்க இயலாது. நடந்த இச்செயலுக்காக, கோபிதாரனை - நீர் சென்று சபிப்பீராக! என்றனுப்பினார்.

பிரம்மிட்டரும் அரசவை அடைந்து அகத்திய மாமுனியை மதியாத காரணத்தால், குஷ்டநோயால் வருந்துவாயாக! என சாபமிட்டார். அகத்தியர் திருப்தியுற்று தென்பொதிகை நோக்கி கிளம்பிச் சென்றார்.

சாபத்தால் நாளுக்குநாள் நலிவுற்றான் மன்னன். வேள்விகளும் மருந்துகளும் பயன் தரவில்லை. இறுதியாக பிரம்மிட்ட முனிவரை சரணடைந்தான். பிரம்மிட்டரோ "என்னால் ஒன்றும் செய்ய இயலாது, அகத்திய மாமுனியைச் சரணடை" என வழிகோலினார்.

மதிமயங்கி செய்த தவறினை மன்னிப்பாரா? மாட்டாரா? என்று கலங்கியவன், எது நடப்பினும் சரியென, பொதிகை மலையடைந்து அகத்தியரைச் சரணடைந்தான்.

மன்னனது துன்பத்தைக் கண்டும் அவனது மன்னிப்பை ஏற்றும் அகத்திய மாமுனி அவன் தீவினையும், குட்ட நோயும் நீங்க வழிவகையினைச் சொல்லத் துவங்கினார்.

"என்னோடு வந்த முனிவர்கள், சிவபக்தி, குருபக்தியில் மும்பலம் கொடுத்து ஞானம் பெற்றவர்கள். உலகமே இவர்களை பிரம்மனும், திருமாலும் காணாத சிவமென போற்றத் தக்கவர்கள். இவர்களது செயலை சிவபெருமானே தடுக்க நினையான். இவர்ளை மதியாமல் நீ பெற்ற கொடுஞ்சாபம் தீர வேண்டின்,

கொங்கு நாட்டின், ஆம்பிரநதிக் கரையில், இலந்தவனத்தில் தவச்சாலை அமைத்து வாழும் வேதவியாசாரின் கூற்றுப்படி பிரமன் ஏற்படுத்திய பிரமதீர்த்தத்துள் நீராடி பசுபதிநாதனை வழிபட்டு வருவாயானால் - உன் சாபம் நீங்கும்"என ஆணையிட்டார்.

மன்னனும் வியாசரை அடைந்து தனது நிலையைச் சொன்னான். வியாசர் முதலில் தயங்கினாலும், அவனது பழைய சீரிய வாழ்வையெண்ணி அவனுக்குச் சாபநீக்க முறைகளைச் சொன்னார்.

சூர்யோதத்தில் நியமம் செய்து, மூழ்கி நீராடி, வெண்ணெய்மலையில் நான்முகன் செய்த வேள்விக் குண்டத்தை

வலம் செய்து ஆநிலைப் பெருமானை வழிபாடு செய்க! இதனை சூர்ய அஸ்தமனம் ஆகும் வரையில் செய்வாயானால் உனது சாபம் நீங்கி, மீண்டும் அரசனாவாய் ஆட்சி புரிவாய், பசுபதி அருளும் பெறுவாய் என முனிவர் கூற அவ்வாறே கோபிதாரன் செய்து வரும்பொழுது, ஏழு நாட்கள் கழிந்து, எட்டாம் நாள் அலங்காரவல்லி சமேதராய் காளை வாகனத்தில் பசுபதிநாதர் காட்சி தந்து, அவனது வழிபாட்டினை ஏற்று சாப நீக்கம் செய்தார்.

கோபிதாரன் சில ஆண்டுகள் ஆட்சி புரிந்தபின், தன் மகனுக்கு பட்டம் சூட்டி விட்டு மீண்டும் வஞ்சி நகர் வந்து மூன்று ஆண்டுகள் பசுபதிநாதனை தரிசித்தான். (இது தேவதுதி முனிவர் காலறு முனிவர்க்குரைத்தது)

நீடிய கரியமாலும் நீண்ட
எண்கணனும் முன்னம்
தேடிய சிவனே போற்றி! செழு
மறைமிருதி எல்லாம்
பாடியபரனே போற்றி! பரிபுரம்
ஒலிப்ப மன்றுள்
ஆடிய அமுதே போற்றி
ஆநிலை நாதா போற்றி

(கோபிதாரன் ஆனிலைநாதரைப் போற்றியது)

## கொடியோன் விபண்டகன் சிவகணத் தலைவனானது

விபண்டகன் என்னும் வேடன் காடுகளில் வசித்து வந்தான். ஈவு இரக்கம் அற்றவன். தஞ்சம் புகுந்தோரையும் கொல்லும் கொடியவன். பசுக்களையும், பெண்களையும் கொல்பவன். கொலை, கொள்ளையிலேயே வாழ்க்கை நடத்தி வந்தவன்.

முனிவர்களைச் சரணடைந்து, சீடனாய் நடித்து அவர்கள் ஏமாறும் சமயத்திலே அவர்களைக் கொன்று களவாடுபவன். சிவன் கோவில்களில் கொள்ளையடித்தவன், காடுவிட்டு கருவூர் எல்லையை அடைந்தான்.

மார்கழித் திருநாளாம், ஆதிரைத் திருநாளன்று மக்கள் அனைவரும் ஆனிலை கோவிலுக்குச் செல்வதைக் கண்டு தானும் செல்ல நினைத்தான். உச்சிக்குடுமி, பூணூல், பஞ்சகச்ச உடை, திருநீறு, உத்திராச்சம் அணிந்து வேதபுத்தகம் கொண்டவனாய் பக்தர் கூட்டத்துள் கலந்தான். கூத்தபிரான் அணிந்திருந்த நவமணி மாலையை கவர சமயம் பார்த்திருந்தான். மானிடர்கள் மட்டுமின்றி தேவர்களும் வழிபாடு செய்தனர்.

வாணாசுரன் ஆயிரம் கரங்களால் முழவு வாசிக்க, துந்துபி முழங்க விஞ்சையர் யாழிசைக்க, முனிவர்கள் விழிநீரால் அபிஷேகம் செய்விக்க அனைத்து முனிவர்களும், ரிஷிகளும், எண்திசை பாலகரும் அட்டவசுக்களும், அந்தணர்களும், முப்பத்து முக்கோடி தேவர்களும் வாழ்த்துப் பாடினர். நந்தியெம் பெருமான் பொற்பிரம்பால் சன்னதித் திரை விலக்கினார்.

நாரணன் தலைமேற்கை குவித்து நிற்க, பிரம்மன் நான்கு வேதம்பாட இந்திரன் கற்பகப்பூமாரி பொழிய, சிவகணங்கள் பாடியாட, வீரபத்திரர், ஐயனார், பைரவர், அருகு நிற்க, உருத்திரரும், குழாங்கள் சூழ அயிராவதம் சூழ்ந்து நின்றார்.

விநாயகரும், வள்ளி தெய்வானையுடனாகிய முருகனும், உமையவர் இடப்பக்கமும் இருக்க, தேவமகளிர் கவரிவீசிட சிவபெருமான் காட்சி தந்தார்.

கும்பலில் நெருக்குண்ட விபண்டகன் மூர்ச்சையடைந்தான். அடியவர் கூட்டம் அவனை வெளியே எடுத்து வருகையில் கோபுரவாயிலடைவதற்குள் உயிரிழந்தனன்.

எமகணங்கள் வரும்போது சிவகணங்கள் தடுத்து நிறுத்தின. சிவபதம் காண இவன் செய்த தவம் யாதென! எமன் சித்ரகுப்தனைக் கேட்க, விபண்டகனது ஏடு செல்லரித்துப் போயிருக்கக் கண்டான்.

திருட வந்தபோதிலும் ஆனிலையில் உயிர்நீத்த காரணத்தால் விபண்டகன் கயிலாயம் சென்றான். அங்கு சிவபெருமான் அவன் குறைகளைக் களைந்து சிவகணங்களின் தலைவனாகப் பதவியேற்புச் செய்வித்தார்.

# நியம முறைகள்

சூர்யோதயத்திற்கு ஐந்து நாழிகைக்கு நித்திரை விட்டெழுந்து, காலைக் கடன் நீக்கி, பிரம்ம தீர்த்தம்அல்லது ஆம்பிர நதியில் மூழ்கி இடையில் ஆடையுடுத்தி அதன்மேலும், ஆடை சுற்றி, நீர் கலங்காமல் மூழ்கி சூரியனுதயத்திற்கு முன் செய்கடன் ஆற்ற வேண்டும்.

கோமயம் சுட்ட விபூதி, நித்தியமெரியும் அடுப்புச் சாம்பல் அல்லது சிவாலய மடப்பள்ளிச் சாம்பல், வேள்விச் சாலை சாம்பல், ஞானதேசிகர் மடத்துச் சாம்பல், சைவ சித்தாந்தன் வீட்டுச் சாம்பல் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றை பஞ்சாட்சரம் ஓதி நீறாக அணிய வேண்டும்.

தூய இலிங்கமாகி கோபுரம் வணங்கி, வாயிற்படி மிதியாமல் பலிபீடம் அடைந்து, பஞ்சாங்கம் அல்லது அட்டாங்க நமஸ்காரம் மூன்றுமுறை செய்து, நிர்மாலியம், மூர்த்தி, இடபம், குரு, அந்தணர், முனிவர்கள், நிழல் மிதியாமல் மூன்று முறை வலம் வந்து வணங்கிட வேண்டும். (இத்தருணத்தில் தாம்பூலம் உண்பது, எச்சில் உமிழ்தல் கூடாது).

வழிபாட்டுக்குரிய பொருட்கள், அவ்வாறு கொண்டு செல்ல இயலாதவர் மனதால் உருகியும், தேவார திருவாசகம் பாடி, அம்பிகை முதலான அனைத்து தெய்வங்களையும் வணங்கி இறுதியில் சண்டிகேஸ்வரரை வணங்க வேண்டும்.

பலிபீடத்தருகே, உருத்திராக்கத்தில் நூற்றெட்டுக்கு குறையாமல் பஞ்சாட்சரம் ஓதி, வலம் வந்து வழிபாடு முடித்தல் வேண்டும்.

பூக்கொய்ய விரும்புவோர், அனைத்து காலைக்கடன் முடித்து, குளித்து நீறுபூசி, நந்தவனத்துள் துளசிச் செடி அல்லது வில்வமரம் அடியில் நீர் தெளித்து, அதிலுள்ள தெய்வத்தை, பூக்கொய்து முடிக்கும் வரை விலகியிருக்குமாறுச் சொல்லிவிட்டு, பழுதுபடாத மூன்று தளத்துடன். கூடியதாக வில்வதளங்களை எடுக்க வேண்டும். பிறகு அவற்றைக் கோவிலில் சமர்ப்பிக்க வேண்டும்.

இவ்வாறு செய்வோர் சாரூபப் பதவி அடைவார். முக்தியடைய வேண்டுமாயின் புரட்டாசிப் பௌர்ணமியில், வைகறையில், ஆம்பிரநதியில் கோமயம் பெய்து நீராடி அனைத்து பாவங்களையும் நீக்கிடுமாறு ஆனிலைநாதனை வணங்கிடல் வேண்டும். மகப்பேறும், செல்வமும் பெற விரும்புவோர் 30 நாட்கள், 15 நாட்கள் அல்லது 5 நாள், ஒரு நாளாகிலும் மலர்களால் அர்ச்சித்து கனி கிழங்குகளை நைவேத்யமாகத் தந்து, பச்சரிசியோடு வழங்கவேண்டும்.

முக்தியும், கைலாயப் பதவியும் அடைய விழைவோர், வஞ்சுளேஸ்வரருக்கு நெய் அல்லது எண்ணெய் விளக்கும், பசுபதிக்கு நெய் விளக்குமிட வேண்டும். மோட்சமடையவும், இந்திர பதவி பெறவும், எண்ணுவோர் ஐப்பசி, சித்திரை முதல் நாள், சங்கராந்தி, மகம், விதிபாதம் முதலிய நாட்களில் பஞ்சாமிர்தம், மாதுளை, தூயநீர், எலுமிச்சங்கனி ஆகியவற்றால் அபிஷேகம் செய்தல் வேண்டும்.

சிவபதவி அடைய சித்திரைமாத பௌர்ணமியன்று தைலமிட்டு, மாக்காப்பணிந்து தயிர், இளநீர், பால், பழம், பஞ்சகவ்வியம், தூயநீர் அபிஷேகம் செய்து கலவை மலர் மாலைகள் சாற்ற வேண்டும்.

தீர்க்காயுளுடன் வாழ்ந்திட, அகில், சந்தனம், குங்கிலியம், பசுநெய் ஆகியவற்றால் தூபப் பணி செய்திடல் வேண்டும்.

காராம்பசு நெய் கொண்டு விளக்கேற்றுவோர் பெறும் பலனை நாரணன் நான்முகனால் கூடச் சொல்ல இயலாது.

பஞ்ச கவ்யம் என்றும், ஆணைந்து எனத் தேவாரத்துள் சிறப்புப் பெறும், கோசாணம், கோசலம், நெய், பால், தயிர் ஆகியவையே அபிஷேகத்துள் சிறப்புப் பெற்றவை.

காலைப் பொழுதில் சந்தனம், பச்சைக் கற்பூரம், கஸ்தூரி, கோரோசனை, பன்னீர் போன்றவற்றால் அபிஷேகம் செய்வித்தவரும், இறைவனை உலா வருகையில் தரிசித்தோரும், பங்குனித் திருத்தேர் பவனி தரிசனம் கண்டோரும் பாவமெலாம் நீங்க பலனடைவர்.

கருவூர்ப் புராணத்தை ஆம்பிர நதி, ஆனிலையப்பர் ஆலயம், வெண்ணெய்மலை போன்ற இடங்களில் படிக்கக் கேட்போர் சிவபதம் அடைவர்.

## கருவூர் தலத்துள் தானங்களின் பலன்

எள், அரிசி பிதுர்க்கீந்து ஓர் அந்தணனை உண்பித்தால் பிற தலத்துள் பலகோடி அந்தணர்க்கு அன்னமிட்ட பலன் அடைவர்.

பசுபதிக்கு அபிஷேகம் செய்து அந்தணருக்கு தானம் தந்தோர் வேண்டுங்கால் மழைபொழியும், தான்யம் கொடுத்தோர், - சிவலோகமும், நிலதானமளித்தோர் - அரசராகவும், உலோகத் தானம் செய்தோர் - பிரம பதவியும் அடைவர். திருப்பணி செய்தோர் - முக்தி அடைவர். சிவனடியார்க்கு மடம் கட்டித்தரின் - சிவலோகமடைவர்.

தவசிகளுக்கு உணவு அளித்தல், தண்ணீர்ப்பந்தல் அமைத்தல், யோக பட்டமும், உருத்திராட்சமும், கமண்டலம் கொடுத்தோ யோகிகளுக்கு தங்குமிடம் அமைத்தல் செய்தோர் சிவனருள் பெறுவர்.

தட்சிணாமூர்த்தி சன்னதியில் நமசிவாய என ஓதுபவர் காசியில் கோடிமுறை ஓதிய பலன் அடைவர்.

மற்ற தலங்களைக் காட்டிலும் இத்தலத்தில் செய்யும் சிரார்த்தம் பலமடங்கு பலன்தரக் கூடியது.

## தல தீர்த்தங்களும், நீராடும் பலனும்

ஆம்பிரா நதியில் நீராடி வழிபாடு செய்யின் பிறவி நோய் நீங்கும். வெண்ணெய்மலையின் கிழக்கேயுள்ள தேனு தீர்த்தத்துள் வைகாசி பௌர்ணமியில் நீராடி முதியோர்க்கு ஒரு பிடி அன்னம் அளிப்பின் புவியாளும் மன்னராவர்.

பசுபதி ஆலயத்தின் கிழக்கும் ஆம்பிராநதியின் மேற்குமாக உள்ள கோபிதாரவனத்துள் முருகப் பெருமான் ஏற்படுத்திய முருக தீர்த்தத்தில்-சித்ரா பௌர்ணமி, சுவாமியும் ஞாயிற்றுக்கிழமையும் கூடிய நாளில் நீராடி சித்ரகுப்த மந்திரம் சொல்லி, முனிவருக்கு ஆடை, குடை, மிதியடி தானமளித்தால் தாங்களும் பிதுர்களும் எமதண்டனை நீங்கும் வண்ணம் முருகன் அருள் கிடைக்கும்.

திருமால் அறிதுயில் கொள்ளும் அரசதீர்த்தத்தில் தான் வியாசர் நீராடினார். அதில் காயத்ரி மந்திரமோதி நீராடுவோர் வைகுண்டலோக இன்பமடைவர்.

பிள்ளையற்றவர்கள், தாடகை தீர்த்தத்துள் நீராடி, நீரருந்தி வழிபட்டால் மகப்பேறும், சுவர்க்க இன்பமும் அனுபவிப்பர்.

## பிரம்ம தீர்த்த மகிமை:

நான்முகனால் ஏற்படுத்தப்பட்ட பிரம்ம தீர்த்தங்களில் நீராடுவோர் பிறவா நெறியடைவர்.

பௌர்ணமி, விதிபாதம், தம் பிறந்த நாள், பெற்றோர் மறைவு நாளில் நீராடுவோர் பொன்னுலக பதவி அடைவர்.

கார்த்திகை மாதம் கார்த்திகை நாளில் நீராடி திருவிளக்கேற்ற சிவபதவி கிடைக்கும். கார்த்திகை நான்கு செவ்வாய்க்கிழமைகளில் சூரிய உதயத்தில், செவ்வாய் மந்திரம் ஓதி, உரைத்து, அருகு, அரிசி தலையில் வைத்து நீராடுவோர்க்கு நோய்கள் நீங்கும்.

ஓராண்டு மாதர் போகம் தவிர்த்து பௌர்ணமி அன்று நீராடினால் மனைவி மக்களுடன் நலமுறை வாழ்வு கைலாய பதவி கிட்டும்.

கார்த்திகை முப்பது நாளும் நீராடுவோர் பிறவி தோறும் தொடரும் வறுமைப் பிணி நீங்குவர்.

வைகாசி மாதம் நடுப்பகலில் அரிசி தலையில் வைத்து மூழ்குவோர் தேவ அமிர்தம் உண்டு வாழ்வர்.

ஆவணி சனிக்கிழமை மூழ்கி சனி மந்திரம் சொல்லி தியானித்து கருத்த கம்பளம், எள், இரும்பு தானம் செய்வோர் சனி பீடை அணுகாது.

பிரமதீர்த்த பழுது நீக்குவோர் நிலவுலக அரசராவர். சோலை நந்தவனம் அமைப்போர், தீர்த்தக்கரை கட்டியோர், சிவபூசை, குரு பூசை செய்வோர் சிவபதம் அடைவர்.

ஆம்பிரநதியில் நீராடி நான்முகன் அமைத்த காளி மற்றும் முருகன் கோவிலை தரிசித்து பசுபதிநாதனை எட்டுமுறை மௌனவலம் வருவோர் அனைத்து அறங்களும் கிடைக்கப் பெறுவர்.

## கல்வெட்டுக்களிலும், சங்க இலக்கியங்களிலும் கருவூர்

தமிழக வரலாற்றுள் வஞ்சி மாநகர் என்று உறுதிபடக் கூறப்படும் கருவூரினை யார் முதல் மன்னனாக இருந்து ஆண்டார் என்பது தெரியவில்லை.

ஆன்பொருணையாற்றின் கரையில் இருக்கின்றமையால் ஆற்றங்கரை நாகரீகம் தோன்றிய காலகட்டம் எனக் கொள்ளலாம்.

சேர மன்னர்களின் முதல் மன்னனான உதியஞ்சேரன் என்னும் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்போன் யவனரை வெற்றி கொண்டதாக பதிற்றுப் பதிகம் கூறுகின்றது. (யவனர்கள் ரோமானியர்கள் ஆவர். இங்கு அகழ்வாய்வின் போது அதிகம் கிடைத்தனையும் ரோமானிய காசுகளே) இக்காலம் முதல் நூற்றாண்டாக இருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

கருவூர் கல்வெட்டுகளில் பெரும்பான்மை ஆறுநாட்டார் மலையென்னும் புகழிமலையில் உள்ளன. இது சமணர்களின் இருப்பிடமாகத் திகழ்ந்திருக்கின்றது.

மிகத் தொன்மையான கல்வெட்டாக 2-ம் நூற்றாண்டைச் சார்ந்த எழுத்து கொண்ட 2. ணாகன் மகன் ளங்கீரன் என உள்ளது.

1. ணாகன் மகன் பெருங்கீரன்
2. மூதா அமண்ணன் யாற்றூர் செய்காயபற்....கோ...ஆ
   ல்லரும்பொறை மகன் பெருங்கடுங்கோன் மகன்
   கடுங்கோன்..ளங்கடு ங்கோ
   ளங்கோ ஆகி அறுபித கல்.
3. (மூ) தா அமண்ணன் யாற்றூர் செங்
   காயபன் உறைய் கோ.
   ஆதன் செல்லிரும்பொறை மகன்

பெருங்கடுங்கோன் மகன்
(இ) ளங்கடுங்கோ (இ) ளங்கோ
ஆகி ஆறுத்தகல்

4. யாற்றூர் செங்காயபன்...
5. கொற்றைந்தைள எய் மூன்று
6. கருவூர் பொன் வாணிகன் நத்தி அதிட்டானம்
7. நல்லிபி ஊர்பிடந்தை மகள் கீரன் கொற்ற...

8. நல்பி ஊர் பிடன் குறும் மகள் செயிபிகளி என்றும் கல்வெட்டுகள் முதலாம் நூற்றாண்டின் எழுத்தனமதி கொண்டனவாக உள்ளது. கருவூருக்கும் புகழிமலைக்கும் பத்துகல் தொலைவு என்பது குறிப்பிடத்தக்கது.

புகளூர்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள மூன்று அரசர்களும் பதிற்றுப்பத்தின் 7,8,9 பாட்டின் பாட்டுடைத்தலைவரானார்.

கல்வெட்டுகளும் பதிற்றுப்பத்து பதிகங்களும் கருவூரே வஞ்சி எனவும், கருவூரைத் தலைநகராய்க் கொண்டு சேர மன்னர்கள் ஆட்சி புரிந்தனர் எனவும் குறிக்கின்றன.

இதனை ஆலத்தூர்க்கிழார் புறம் 36-ல் சோழன்குளமுற்றத்து துஞ்சிய கிள்ளிவளவனான் கரூர் முற்றுகையிடப்பட்டதாக கூறுவதிலிருந்து உணரலாம். மாறோக்கத்து நப்பசலையாரும் புறம் 37-39ல் இதனை கூறியுள்ளார்.

குராப்பள்ளியில் துஞ்சிய கிள்ளிவளவன் இதனை முற்றுகையிட்டு வென்றதாகக் கோவூர் கிழாரால் பாடப்பட்ட புறப்பாட்டு 373 கூறுகிறது.

பரணர் செங்குட்டுவனைப் பாடுங்கால் காவிரி, ஆன்பொருணை, குடகனாறு கலக்கும் கூடல் எனப்பாடியுள்ளார். கூடல் என்பது 15 கல் தொலைவில் தற்போது திருமுக்கூடலூர் என்றழைக்கப்படுகிறது.

சோழர் ஆட்சியிலும், கருவூர் இருந்திருக்கின்றது என்பதனை பெரியபுராண புகழ்ச்சோழ சருக்கம் கூறுகின்றது.

எறிபத்தர் வரலாற்றில் கூறப்பட்டுள்ளது.

மீண்டும் 7ம் நூற்றாண்டில் சேரர் ஆளுகையின் கீழ் கருவூர் வந்தது. பிற்பகுதியில் கூன்பாண்டியன், நெல்வேலி வென்ற நெடுமாறன், அரிகேச பராங்குச மாறவர்மன் ஆண்டதாகக் (கி.பி. 650 - 700 வரை) கூறப்படுகின்றது. பாண்டிக் கோவை எனும் நூல் சேரனைப் பாண்டியன் பலமுறை வென்றதாகக் கூறுகின்றது. சின்னமனூர் மற்றும் வேள்விக்குடிச் செப்பேடுகளும் இதனை வலியுறுத்துகின்றன. சேரனை பலமுறை வென்றதாகக் கூறப்படுவதிலிருந்து சேரன் மிக்க வலுவுடையவனாக இருந்திருக்கின்றான் என்பது தெரிய வருகின்றது.

சேர அரசு கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தென் திருவாங்கூர் கோட்டாறு, திருநெல்வேலி ஆகிய இடம்வரை வில்வேலி எனும் பெயர் பெற்ற சேரமன்னன் காலத்தே விரிவடைந்துள்ளதாகத் தெரிகிறது. பாண்டியன் இவனோடு பலமுறை போரிட்டதை பாண்டிக்கோவை தெளிவுபடுத்துகிறது.

இதே காலங்கள் பல்லவப் பேரரசு விரிவடைந்தது. சிம்மவிஷ்ணு, நரசிம்ம பல்லவன் சேரரை வென்றதாகத் தெரிகிறது.

தளவாய்ப்புரச் செப்பேடு காடவனை (பல்லவனை) நெடுஞ்செடையன் கருவூரில் வென்றான் எனக்கூறுகின்றது.

திருமங்கை ஆழ்வார் பரமேஸ்வர விண்ணகரப் பதிகத்தில் ஏறக்குறைய கி.பி. 765-ல் நந்திவர்ம பல்லவன், நெடுஞ்சடையனை வென்று மீண்டும் கருவூரைக் கைப்பற்றினான் எனக் கூறப்பட்டுள்ளது.

கருவூரில் கிடைத்த இரண்டு நடு கற்கள் ரவிகோ கலியன், வஞ்சி வேளடியன் என்பவனையும் குறிக்கின்றன. பகைவர் ஆனிரை கவரும் போது பூசலில் இறந்தவராகத் தெரிகின்றது.

ஈரோட்டில் கிடைக்கப்பெற்ற கல்வெட்டில் வஞ்சிவெண்தாழி என்பவன் குறிக்கப்படுகின்றான்.

9-ம் நூற்றாண்டின் துவக்கத்தில் ரவிகோதை என்ற சேரன் மீண்டும் கைப்பற்றியதாகவும், இந்நூலில் சோழப் பேரரசின் கீழ் கொண்டுவரப்பெற்றதாகவும் தெரிகிறது.

முதல் இராஜராஜன் காலத்தே தனது தூதனை சரிவர நடத்தவில்லை என்னும் காரணத்தால் கைப்பற்றினான் எனவும், கேரளாந்தகன் மலைநாடு எனும் பெயர் மாற்றமும், அதன் பின் அதிராஜராஜ மண்டலம் எனவும் பெயர் மாற்றம் செய்யப்பட்டது.

கருவூரில் இராசேந்திரன், இரண்டாம் இராசேந்திரன், வீரராசேந்திரன், விக்ரமசோழன், மூன்றாம் குலோத்துங்கன் ஆகியோரது கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன.

## கருவூரின் சிறப்பு

சங்ககாலச் சேரரது கோ நகராகத் திகழ்ந்த கருவூர், சிலகாலம் சோழர், பாண்டியர், பல்லவர், பிற்கால பாண்டியர், பேராதிக்கச் சோழர், விசய நகரத்தார் முதலான அரச குலத்தவரின் ஆட்சியையும் கண்டது. கருவூரே சேரரது தலைநகர், இதுவே வஞ்சிமாநகர் என்பதற்கானச் சான்றுகள் பல கருவூரில் கிடைத்துள்ளன. கரூருக்கு அருகிலுள்ள நெரூர் பெருமாள் கோயில் கல்வெட்டு வஞ்சி மாநகரமான கருவூர் எனக் குறிப்பிடுகின்றது. அடுத்து கருவூரில் கிடைத்த நடுகல்லில் கல்வெட்டு உள்ளது. அதில் வஞ்சி வேலடியான் குறிக்கப் பெறுகிறான். ஆனிலையப்பர் கல்வெட்டில் வஞ்சி மாநகரான கருவூர் என்றும் கருவூர்ப் பெருமாள் கோயில் கல்வெட்டில் வஞ்சி ஸ்ரீ வைஷ்ணவரோம் என்றும் குறிக்கப் பெற்றுள்ளது.

அடுத்து கருவூர் பண்டு பல வணிகப் பெருவழிகள் கூடும் இடத்தில் இருந்ததால், கேந்திர முக்கியம் பெற்றதாகத் திகழ்ந்தது. கடல் கடந்த வாணிகத்தில் சிறப்படைந்தது. இங்குள்ள அமராவதி ஆற்றங்கரையில் கிரேக்க, சீன, உரோமானிய, ஈழ நாணயங்கள், நம் நாட்டின் அனைத்து மரபினரின் காதணிகளும் கிடைத்துள்ளன. வெள்ளி, பொன் நாணயங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. கி.மு. 5ஆம் நூற்றாண்டு - கி.பி. 2ஆம் நூற்றாண்டின் இடைப்பட்டதான வெள்ளி முத்திரை நாணயங்களும் இங்கு கிடைத்துள்ளன. சங்ககால வெள்ளி, பொன், செப்பு மோதிரங்கள் பல அமராவதி ஆற்றுப் படுகையில்

கிடைத்துள்ளன. இவற்றுள் தமிழி (பிராமி) எழுத்துக்களும் உருவங்களும் படுகையில் கிடைத்துள்ளன. இவற்றுள்தமிழி (பிராமி) எழுத்துக்களும், உருவங்களும் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றால் கருவூரில் பண்டைய பெருமை புலனாகின்றது.

வணிக, வரலாற்றுச் சிறப்புமிக்க கருவூர் ஆன்மீகச் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்தமை குறிப்பிடத்தக்கது.

மூன்றாம் குலோத்துங்கனது ஆட்சிக்கு முன் சேரர்களால் மீட்கப்பட்ட கருவூரை, மிகவும் கடினமாகப்போர் செய்து மூன்றாம் குலோத்துங்கன் வென்றதை அவனது மெய்கீர்த்தி கூறுகின்றது. இதில் சேரனுக்கு மீண்டும் முடி வழங்கியமையால் முடிவழங்கு சோழபுரம் என அழைக்கப்பெற்றது.

மூன்றாம் இராசராசன் காலத்தே இங்கே போசளர்கள் வந்துள்ளனர். பிறகு பிற்காலப் பாண்டியர் ஆட்சியர் மாறியதாக சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றது.

பிறகு மதுரை நாயக்க மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்தமையை சொக்கலிங்க நாயக்கர் கல்வெட்டுகள் கூறுகின்றன.

கல்வெட்டிற்கே தனியே ஆராய்ச்சி செய்யுமளவிற்கு விரிவான வரலாறு படைத்தமையாக கருவூர் உள்ளதால் இங்கே அளவாக சுருக்கப்பட்டுள்ளது.

## கருவூர்ச் சித்தர்

பதினெண் சித்தர்களில் ஒருவரான சித்தர் கருவூரார் இத்தலத்துள் தென்மேற்கு மூலையில் கோவில் கொண்டுள்ளார். மேலும், இவர் தஞ்சைப் பெரிய கோவிலுள்ளும் சமாதி கொண்டிருப்பதைக் கூறப்படுகின்றது. இவரது உருவச் சிலை நவநீதிகிரி என்னும் வெண்ணெய்மலையில் உள்ளது.

இவர் ஒன்பதாம் திருமுறையில் திருவிசைப்பா பாடியுள்ளார். இராஜராஜனது காலத்தில் இவர் இருந்ததற்குச் சான்றுகள் உள்ளன. இவர் போகரது மாணாக்கர் ஆவார்.

பற்றற்றவராக வாழ்ந்திருந்த இவர் மீது அந்தண இனத்தைச் சார்ந்தவர்கள் வாம மார்க்கத்தைக் கடைப்பிடித்து மது, புலால் இவைகளால் பூசை செய்வதாக மன்னரிடம் குறை கூற, மன்னன் இவரிடம் எக்குறையும் காணாது, குறை கூறியவர்களைத் தண்டித்தனன். மீண்டும் மீண்டும் அந்தணர்கள் தொல்லைதரவே இவர் தைப்பூசத்தன்று ஆனிலையப்பருடன் ஐக்கியமானதாகச் கூறப்படுகின்றது.

சித்த மருத்துவத்தைப் பற்றியும் இவர் பல பாடல்கள் பாடியுள்ளார். மழை வராத காலத்தே இவரது வாக்கால் மழை பொழிந்து வெள்ளம் வந்தது. சிவபெருமான் கோவில் கதவு திறக்காதபோது கவிபாடித் திறப்பித்துள்ளார்.

சிவத்தல யாத்திரை வராககிரி துவங்கி திருக்குருகூர்வரை சென்றார். இறைவன் பாகவதர்கள் கனவில் தோன்றி, கருவூராரின் அருள் பெறுக என உத்திரவிட்டதாலும் கருவூராரை வணங்கி வாழ்த்தியமையால், திருக்குருகூரின்கண் வாழும் நாய்களுக்கும் இவர் மோட்சமளித்ததாகக் கூறப்படுகின்றன.

பிறகு திருச்செந்தூர் முருகனை வணங்கி, திருநெல்வேலியை அடைந்தார். நெல்லையப்பரை வருகவென அழைக்க அவர் வராது போகவே, ஈசன் இங்கில்லாமையால் எருக்கெழக் கடவது எனச் சபித்தார்.

இறைவன் அடியவர்களை அழைத்து, நான் காலந்தாழ்த்தியமையால் கருவூரார் என்னைச் சபித்துச் செல்கிறார். வாருங்கள்! அனைவரும் சென்று அவரைச் சமாதானப்படுத்துவோம் எனக் கூறி விடையேறிச் சென்று கருவூராருக்கு காட்சி தந்தார். பின் அவர்களுக்கு சாப விமோசனமளித்துச் சென்றார். திருப்புடைமருதூர் ஆலயம் சென்று வணங்க இறைவன் காட்சித்தந்து கரூருக்கு வருக என்றுரைத்தார். இராஜராஜன் தஞ்சையில் எடுத்த பெரிய கோவிலின் லிங்கம் மருந்து இளகியதால் கருவூரார் தனது தாம்பூலத்தால் லிங்கத்தை ஸ்தாபனம் செய்தார். சிதம்பரம் நடராஜரது உருவச்சிலையும் போகரது ஆணையால் செய்யப்பட்டதாகும். இவரது பெருமைகள் அளவிடற்கரியன.



## மகா பிரதோஷ மகிமை

உலகனைத்தும் காத்து வரும் பரமேசுவரனுடைய எண்ணற்ற விரதங்களில் மிகவும் உயர்ந்ததாகவும், எல்லா நற்பலன்களையும் அளிக்கக் கூடிய (உடனேயே) விரதம் தான் மகா பிரதோஷ விரதமாகும். ஒவ்வொரு மாதமும் பவுர்ணமி, அமாவாசை இரண்டு திதிகளுக்கு முன்தின நாளுக்கு முந்தினநாள் (திரயோதசி நாள்) வரும்.

சிவாய நம என்று சொல்லுகின்றவர்களுக்கு அபாயமில்லை என்று சொல்லுவார்கள். சிவனைத் துதிப்பதற்கு உகந்த நாளில் முக்கியமானது பிரதோஷ நாளாகும். தேவர்களின் துயரை நீக்க நஞ்சை உண்ணாமலும், உமிழாமலும் தன் கண்டத்திலிருந்து அசுரர்களிடமிருந்து தேவர்களைக் காத்து, அனைவரின் துயரத்தையும் போக்க, சக்தி முழுவதையும் தன் வசப்படுத்தி நந்தி தேவரின் இரு கொம்புகளுக்கிடையே திருநடனம் பிரதோஷ காலத்தில்தான் செய்தருளினார். ஆகையால் பிரதோஷ காலத்தில் கூட்டுவழிபாடு செய்வது சகல செல்வங்களையும், லாபங்களையும், புத்திர லாபம், ஆரோக்கியம், வியாபார நலம், மனதில் நினைக்கும் நல்ல எண்ணங்கள் நிறைவேறுவது போன்ற நல்ல பலன்களை அடையலாம். ( சனிக்கிழமை அன்று எம்பெருமான் நடத்தியதால் சனிக்கிழமைகளில் வரும் பிரதோஷ வழிபாடு மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது.)

## உற்சவத் திருவிழாக்கள்

இக்கோவிலில் பல உற்சவங்கள் நடைபெற்ற போதிலும் பங்குனி உத்திரத் திருவிழாவே பிரம்மோற்சவமாக நடைபெறுகின்றது. முதல் நாள் இரவு வாஸ்து சாந்தி துவங்கி இறுதி நாள் சண்டிகேஸ்வரர் உலா வரை சிறப்பாகத் தினமும் நடைபெறுகின்றது. ஒவ்வொரு நாளும் உபயதாரர் நிகழ்ச்சிகளாக எல்லா புறப்பாடுகளும் (14 நாட்கள்) நடைபெறுகின்றன.

இதன் முக்கியச் சிறப்பு பங்குனி உத்திரத் திருவிழாவின்போது நடைபெறும் திருத்தேரேயாகும்.

மார்கழித் திருவாதிரையும், கந்த சஷ்டியும், நவராத்திரி உற்சவமும் அடுத்த இடத்தை வகிக்கின்றன.

**மாதத் திருவிழா** - சங்கடஹர சதுர்த்தி, ஷஷ்டி, கிருத்திகை போன்ற விசேஷ நாட்களில் சிறப்பு அபிஷேகமும், பிரதோஷங்களில் நந்திகேஸ்வரருக்கும், சுவாமிக்கும் சிறப்பு அபிஷேகமும், பிரதி மாதம் தேய்பிறை அஷ்டமியில் பைரவருக்கு அபிஷேகமும், பிரதி மாதம் பௌர்ணமி தினத்தன்று ஸ்ரீ கருவூராருக்கு சிறப்பு யாகம் மற்றும் அபிஷேகமும் நடைபெற்று வருகின்றது. பிரதோச தினத்தன்று 10,000க்கும் மேற்பட்ட பக்தகோடிகள் கலந்து கொண்டு சிவனருள் பெறுகின்றனர்.

### பூஜைகள் :

இக்கோவில் பூஜைகள் உஷத்காலம் துவங்கி பள்ளியறை வரை ஆறுகால பூஜைகள் நடைபெறுகின்றன. காமிகம் என்னும் ஆகம முறையில் பூஜைகள் நடைபெறுகின்றன.

உஷத் காலம் காலை 6.00-6.30 பள்ளியெழுச்சி காலை 6.30-7.00
காலசந்தி காலை 8.00-9.00 பெருங்காலசந்தி காலை 11.00-11.30
உச்சிக்காலம் மதியம் 12.00-12.30 சாயரக்ஷை மாலை 5.30-6.30
அர்த்தஜாமம் இரவு 8.00-8.45 பள்ளியறை இரவு 8.45-9.00

கோவில் காலை 6.00 மணி முதல் 12.30 வரையிலும் மாலை 4.00 மணி முதல் 8.45 வரையிலும் நடை திறந்திருக்கும்.

## திருப்பணிகள்

இத்திருக்கோயிலில் உள்ள கல்வெட்டுச் சான்றுபடி நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் 1896-ல் பாலஸ்தாபனம் செய்து 1906-ல் குடமுழுக்கு விழாவும், பின்னர் கரூர் நகரப் பொதுமக்களால் 1960-ல் ஒரு குடமுழுக்கும், 1974-ல் எண்கூட்டு மருந்து சாத்தலும், 1993-ல் குடமுழுக்கும் 2006-ல் ஸ்வர்ணபந்தன குடமுழுக்கு விழாவும் நடைபெற்றுள்ளது.

## நிர்வாகம்

தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தின் கீழ் செயல் அலுவலர் ஒருவரும் ஐந்து நபர்களைக் கொண்ட அறங்காவலர் குழுவும் இணைந்து செயல்படுகின்றனர்.

திருச்சிற்றம்பலம்



## திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பதிகம்-1

பாடல் 11 இரண்டாம் திருமுறை ப்ண் : இந்தளம்

தொண்டெ லாமலர் தூவி யேத்தநஞ்சு
உண்ட வாருயிர் ஆய தன்மையர்
கண்ட னார்கரு வூருள் ஆநிலை
அண்ட னாரருள் ஈயும் அன்பரே.

நீதி யார்நினைந் தாய நான்மறை
ஓதி யாரொடுங் கூட லார்குழைக்
காதி னார்கரு வூருள் ஆநிலை
ஆதி யாரடி யார்தம் அன்பரே.

விண்ணு லாமதி சூடி வேதமே
பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூருள் ஆநிலை
அண்ண லார்அடி யார்க்கு நல்லரே.

முடியர் மும்மத யானை யிருரி
பொடியர் பூங்கனை வேளைச் செற்றவர்
கடியு ளார்கரு வூருள் ஆநிலை
அடிகள் யாவையும் ஆய ஈசரே

பங்க யம்மலர்ப் பாதர் பாதியோர்
மங்கை யர்மணி நீல கண்டர்வான்
கங்கை யர்கரு வூருள் ஆநிலை
அங்கை யாரா வத்தெம் அண்ணலே.

தேவர் திங்களும் பாம்புஞ் சென்னியில்
மேவர் மும்மதில் எய்த வில்லியர்
காவ லர்கரு வூருள் ஆநிலை
மூவ ராகிய மொய்ம்ப ரல்லரே.

பண்ணி னார்படி யேற்றர் நீற்றர்மெய்ப்
பெண்ணி னார்பிறை தாங்கு நெற்றியர்
கண்ணி னார்கரு வூருள் ஆநிலை
நண்ணி னார்நமை யாளும் நாதரே.

கடுத்த வாளரக் கன்க யிலையை
எடுத்த வன்தலை தோளுந் தாளினால்
அடர்த்த வன்கரு வூருள் ஆநிலை
கொடுத்த வன்னருள் கூத்த னல்லனே.

உழுது மாநிலத் தேன மாகிமால்
தொழுது மாமல ரோனுங் காண்கிலார்
கழுதி னுன்கரு வூருள் ஆநிலை
முழுது மாகிய மூர்த்தி பாதமே.

புத்தர் புன்சமண் ஆதர் பொய்யுரைப்
பித்தர் பேசிய பேச்சை விட்டுமெய்ப்
பக்தர் சேர்கரு வூருள் ஆநிலை
அத்தர் பாதம் அடைந்து வாழ்மினே.

கந்தமார் பொழிற் காழி ஞானசம்
பந்தன் சேர்கரு வூருள் ஆநிலை
என்தை யைச் சொன்ன பத்தும் வல்லவர்
சிந்தை யில்துயர் ஆய தீர்வரே.

திருச்சிற்றம்பலம்



## கொங்குமண்டல சதகம்

ஆதிகருவூர் அதிவெஞ்சமாங்கூடல் நீதன்
கொடுமுடிற மேல்நீர் நவா-மேதினியில்
நாதன் அவினாசிநான் முருகன் பூண்டி
திருச்சோதிச் செங்கோடுடனவே சொல்.

## தல விநாயகர்

அஞ்சுளாரணி யெழுத்தோராறுளார் சடையிற்கண்ட
நஞ்சுளாரணிய பாகநயத்துளார் ஞானம் பூத்த
நெஞ்சுளாரணிய மேவும் களிற்றினை வழுத்தல செய்வோம்

## முருகக் கடவுள்

உரைதரு சுருதிவேத உபநிடதத்தினுச்சிப்
பரையருள் விழிகளிப்பப் பார்விசும் புய்யத்தோன்றி
வரைபக முருக்கி வெஞ்சூர் மாமுதல் தடிந்துமுந்நீர்க்
குரைகடல் குடித்தவை வேல் குமரனுக்கன்பு செய்வோம்.

## நந்தி தேவர்

அந்திவான் பிறையுமானும் அடல்மழுப்புடையுமேந்தித்
தந்திவீழுரிவை போர்த்த தனிமுதல் உருவந்தாங்கிப்
புந்திமாலகலஞான போதக வெயில்விரிக்கும்
நந்திவானிரவிநாடி நமதிருள் நலிவுசெய்வோம்.

## பசுபதீச்சுரர்

மேவருதத் துவசித்தி யடைந்துதத்த மெய்யுணர்ந்து
விமலஞான
மூவகையா ருயிர்விளங்கி முதிருமன்பால் வழங்கு
மொரு முத்திவாழ்வைப்
பாவனைகடந்து நின்ற பரஞ்சுடரைப் பசுபதிநா
யகனை முன்னைத்
தேவர்கள் தே வைக்கருவூர்ச் சிவக்கொழுந்தை
இதயமலர் திகழவைப்பாம்.

## வடிவுடையம்மை

நதிகாட்டும் புனற்கழனி வளங்காட்ட அறங்காட்டும்
நலஞ்சேர் வஞ்சிப்
பதிகாட்டும் பசுபதியோ ரிடங்காட்ட வலங்காட்டும்
பரையை மேலாம்
கதிகாட்டும் கருங்குயிலை அருள்காட்டும் கயலிரண்டு
காட்டும் தூய
மதிகாட்டும் மடமயிலை வடிவுடைய நாயகியை
வணங்கி வாழ்வாம்.

## திருஞானசம்பந்தர்

பொன்புனை கமலச் செல்வி போற்றுபேரெழிலும்தூய
வன்புநல்லறமும் கற்பும் அவயவமாக ஞானம்
முன்புருவமைந்த பேதை முற்றிய என்புக்காவி
பின்பருள்புரிந்த காழிப் பிள்ளைதாட்கன்புசெய்வாம்.

## திருநாவுக்கரசர்

சூழிமால்யானை தாழப் பிணித்தகற்றுணர்ந்தாழா
தாழிவாய்மிதப்ப மேலாம் ஐந்தெழுந்துணிர்வி னோங்கிக்
காழிவாழ் ஞானம்பூத்த கவுணியக் கொழுந்தைநட்ட
வாழிவாகீசர் வாசமலர்ப்பதம் வணங்கல் செய்வாம்.

## சுந்தரமூர்த்தி

வெள்ளியங்கிரியை நீக்கி நாவலூர் மிளிரத்தோன்றி
ஒள்ளியதோகைபரகன் சாதனத்தோட்டிக் குள்ளாய்த்
தெள்ளிய பரவையாழ்ந்து சங்கிலி சிமிழ்ப்புற்றாக
தள்ளிய களிற்றின்பாத தாமரைதலைமேற்கொள்வாம்.

## மாணிக்கவாசகர்

துன்றிருள் நீங்குமாறும் சுடரொளி தோன்றுமாறும்
முன்றிரு மறைகாணாத முதலெழுந்தருளிப்பார் மேல்
தன்றிரு ஞானபாதம் அளித்தலுந் தனையுணர்ந்த
தென்றிரு வாதவூரன் சேவடி சென்னிசேர்ப்போம்.

## கருவூர்த் தேவர்

ஊர்ந்தனங் கருவூரன்னை உதரத்திலினியூராமை
சார்ந்தனங்கருவூரு ரென்னத்தவந் திளைத்தாற்றித் தக்கோர்
ஆர்த்தரும் கருவூரெந்தை ஆனிலையடிகள் பாதம்
பாதம் சேர்ந்த நம்கருவூர்த் தேவர் சேவடி சென்னிசேர்ப்போம்.

## புகழ்ச்சோழர்

காய்ந்தசுடர்வேற் புகழ்ச்சோழர் கண்ணார்நுதலோனடி யார்கள்
வேய்ந்தாடையாதிகளிடத்து மெய்யன்புடையார் பெரும் போரில்
மாய்ந்ததலையொன்றினிற் சிறுபுன்சடை கண்டயர்ந்து வளர்த்தெரியிற்
பாய்ந்துகதிபெற்றிடுங் கருவூர்ப் பசுபதிப்பெருமானே.

## சேக்கிழார் பெரிய புராணம்

செல்வக் கருவூர்த் திருஆநிலைக் கோயில் சென்று இறைஞ்சி
நல்இசை வண்தமிழ் சொற்றொடைபாடி அந்நாடு அகன்று
மல்கிய மாணிக்க வெற்பு முதலா வணங்கி வந்து
பல்கு திரை பொன்னித் தென்கரைத் தானம்பலபணிவார்.

## *அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்*

இத்தலத்திற்கு 7 பாடல்கள் உள்ளன. அவற்றுள் சில.

## திருப்புகழ் - 1

மதியால் வித்தகனாகி மனதால் உத்தமனாகிப்
பதிவாகி சிவஞானப் பரயோகத் தருள்வாயே
நிதியே நித்தியமே என் நினைவே நற்பொருளாயோய்
கதியே சொற்பரவேளே கருவூரிற் பெருமாளே

# திருப்புகழ் - 3

சஞ்சல சரிதபர நாட்டர்கள்
மந்திரி குமர்படை யாட்சிகள்
சங்கட மகிபர் தொழ ஆக்கினை முடிசூடித்

தண்டிகை களிறுபரி மேற்றணி
வெண்குடை நிழலிலூல வாக்கன
சம்ப்ரம விபவசவு பாக்கிய முடையோராய்க்

குஞ்சரமும் விசிறவிறு மாப்பொடு
பஞ்சணை மிசையிலிசை யாத்திரன்
கொம்புகள் குழல்கள்வெரு வாத்தியம் **இயல்கீதம்**

கொங்கணி மகளிர்பெரு நாட்டிய
நன்றென மனது மகிழ் பரத்திபர்
கொண்டய னெழுதும்யம கோட்டியை **உணராரே**

பஞ்சவர் கொடியவினை நூற்றுவர்
வென்றிட சகுனிகவ றாற்பொருள்
பங்குடையவனிபதி தோற்றிட அயலேபோய்ப்

பண்டையில்விதியைநினை யாப்பனி
ரண்டுடை வருஷமுறை யாப்பல
பண்புடன் மறைவின்முறை யாற்றிரு **வருளாலே**

வஞ்சனை நழுவிநிரை மீட்சியில்
முந்துத முடையமனை வாழ்க்கையின்
வந்தபின் உரிமையது கேட்டிட **இசையாநாள்**

மண்கொள விசையன்விடு தேர்ப்பரி
உந்தினன் மருகவய லூர்க்குக
வஞ்சியிமரர் சிறை மீட்டருள் பெருமாளே.

## கருவூர்த் தேவர் அருளிய திருவிசைப்பா

ஒன்பதாம் திருமுறை பதிகம்-10

பாடல் 105

பண் : பஞ்சமம், காந்தாரம்
சாளரபாணி புறநீர்மை

செங்கணா போற்றி திசைமுகா போற்றி
சிவபுர நகருள் வீற்றிருந்த
அங்கணா போற்றி அமரனே போற்றி
அமரர்கள் தலைவனே போற்றி
தங்கள்நான் மறைநூல் சகலமுங்கற்றோர்
சாட்டியக் குடியிருந் தருளும்
எங்கள்நாயகனே போற்றியே ழிருக்கை
இறைவனே போற்றியே போற்றி

## ஆனிலைப் பெருமான்

நீடிய கரியமாலும் நீண்டவெண் கணனும்முன்னம்
தேடிய சிவனேபோற்றி செழுமறை மிருதியெல்லாம்
பாடிய பரனேபோற்றி பரிபுரமொலிப்பமன்றுள்
ஆடிய அமுதேபோற்றி ஆனிலைநாதா போற்றி.

திருச்சிற்றம்பலம்



சிவமயம்

தெய்வச் சைவ செந்தமிழ் மூர்த்திகளான திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய நால்வர் பெருமக்களால் பாடல் பெற்ற சிவத்தலங்கள் மொத்தம் 274 ஆகும். அதில் கொங்கு நாட்டில் மட்டும் 7 தலங்கள் உள்ளன. அவற்றுள் இத்தலம் முதலாவதாக விளங்குகிறது.

இதன் பாடல்,

ஆதி கருவூர் அதிவெஞ்சமாங்கூடல் நீதன்
கொடுமுடி மேல்நீர் நணா - மேதினியில்
நாதன் அவினாசிநன் முருகன் பூண்டி
திருச்சோதிச் செங்கோடனவே சொல்.



